சென்னைப் பதிவு எண் கரு0கூ கஉ பக்கங்கள் விலை அணு ஒன்று. தந்தி விலாசம்:—"ஊழியன்"

சந்தா விபரம்.
வருடச் சந்தா ... ௩—0—0
ஆறுமாதச் சந்தா ... க—0—0
வெளிநாடு வருடச்சந்தா ... எ—0—0

# ஊழியன்

விளம்பர விகிதம்.
அங்குலம் க-க்கு வாரம் க-க்கு 0—அ—0
நீடித்த விளம்பரம் அங். க-க்கு க—0—0
ஒப்பந்த விளம்பர விகிதத்திற்கு எழுதவும்.

## The "Oolian," a Nationalist Weekly.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

நல்லவை வாழ்க! அல்லவை ஆழ்க!!

மலர் கந. } காரைக்குடி, ஸ்ரீமுக-ஞு சித்திரை-மீ எ-உ புதன்கிழமை. { இதழ் கசு

# வீர நாடு.

## காவடிச் சிந்து.

"தோன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடு" "முன்னை யிலங்கை அரக்கர் அழிய" என்னும் பாரதியார் காவடிச் சிந்துகளையும், "ஆறுமுக வடிவேலவ னேகலி" என்ற அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்தையும் பின்பற்றிப் பாடப்பெற்றது.

ராய. சொ. வேலூர்ச் சிறையில் உகூ—௧0—௩உல் பாடியது.

(சென்றவாரத் தொடர்ச்சி)

சோரனுக் குத்துணை செய்த வவன்மகன்
தொல்லிந் திரசித்தன்—எனும்
வீரன் தலைதரை வீழ்த்தும் இளையவன்
வீரம் செறிநாடு. (கக)

தன்னொரு மைந்தனின் மார்பத னிற்றேர்
தான்விடுத் தேமடித்த—நீதி
மன்னவன் மாமுறை கண்ட மநுவெனும்
மாண்புடை யானடு. (க[illegible])

பெற்ற மகனுயிர் விட்ட களம்போய்ப்
பிணக்குவை தான்புரட்[illegible]கன்
இற்ற உயர்ச்சி[illegible]ன ட[illegible]றதி னுமகிழ்
ஏந்திழையார் [illegible]டு. (கந)

தன்கண வன்தவ றில்லா தவனெனச்
சபையில் வழக்குரைத்துத்—தமிழ்
மன்னவ னைப்பழி வாங்கிய கண்ணகி
மங்கை பெருநாடு. (கச)

குற்றமில் கோவலன் தன்னைக் கொலைசெய்
கொடுமை உணர்ந்தவுடன்—உயிர்
சற்றுந் தயங்கா தழித்த பெரும்புகழ்த்
தமிழ்க்கோன் அருநாடு. (கரு)

புறவின் பொருட்டுத் தசையரிந் திட்ட
புகழுடை மன்னவனும்—சிபி
அறமுடைத் தன்மையன் ஆண்ட சிறப்புடை
அணிப்பர தநாடு. (கசு)

காதல் யசோதரை இன்பக் கடலைக்
கடந்து பெருந்திருவை—விட்டுப்
போதி யிருந்தறம் ஓதிய நாதனெம்
புத்தன் தவநாடு. (கஎ)

பிறப்புரி மைசுய ஆட்சி யெனுமறை
பேசிய போறிஞன்—உயர்
சிறப்புடைப் பாலகங் காதான் என்றவெம்
திலகனின் தாய்நாடு. (கஅ)

அன்றுமின் றுமென்றும் அவனி தனிலிணை
அருமை எனஉயர்ந்து—அறம்
நன்றறி நாயகன் மோகன தாசனெம்
நற்றவன் வாழ்நாடு. (ககூ)

எல்லையில் குண்டுகள் இல்லாப் பழையநாள்
எவரும் நடுங்கிடவே—போரில்
வில்லில் சரந்தொடுத் துலகு கலக்கிய
வீரர் மலிநாடு. (உ0)

# சுசீலா.

## ஓர் சீர்திருத்தச் சிறு கதை.

(கோட்டையூர் ராம. ராம)

பங்குனி மாதம் உஙு-ம் தேதி கண்பகல் ஆதவன் கொடூரமாக தனது கிரணங்களை வீசிக்கொண்டு அக்கினி மயமாய் ஜ்வலிக்கின்றான். குன்றக்குடியை நோக்கி நாலா பக்கங்களிலிருந்தும் பக்தர்கள் பாற்குடம், காவடி முதலியவற்றோடு ஆவேச உணர்ச்சியுடன் விரைந்து வந்துகொண்டிருக்கின்றனர். குன்றக்குடியை அடுத்துள்ள ஓர் ஆற்றின் மத்தியில் தண்ணீர்ப்பந்தல் ஒன்று நிர்மாணிக்கப் பெற்றிருக்கிறது. கொதிக்கும் அவ்வாற்று மணலின் கொடுமைக்கு ஆற்றாது ஓடிவரும் மக்களுக்கு இளைப்பாறுவதற்கு ஓர் நல்லிடமாய் அத்தண்ணீர்ச்சாலை அமைந்து பற்பல இனிய பானங்களால் அவர்களை மகிழ்வித்தது.

அப்பொழுது மிக நாகரிகமாய் உடையணிந்திருந்த ஓர் சுந்தரப் பெண் வெய்யிலின் கொடுமையைச் சகிக்க முடியாதவளாய் மிகக் களைப்பும் சோகமும் அடைந்து தண்ணீர்ச்சாலையை நோக்கி வேகமாய் நடந்து வந்தாள். அவ்வாறு வந்த அவள் தண்ணீர்ச்சாலைக்குள் நுழையப் போவதைக் கண்டு அவள் பின்வந்த அவளுடைய ஜனங்கள் கூக்குரலிட்டு, "உள்ளே போவாதே; கொண்ணுப்புடுவாங்க; ஏ! சுசிலா' போவாதே" என்று சப்தமிட்டுக்கொண்டு தண்ணீர்ப் பந்தலுக்கு வெளியில் சில கெஜங்களுக்கு அப்பால் நெருப்பின்மீது நிற்பது போன்று அப்பாக்த ஆற்று மணல்மீது பரிதவித்துக்கொண்டு நின்றனர். என்றுமே அத்தகைய வெய்யிலின் துன்பத்தைப் பொறுத்தறியாத சுசிலா அவர்களுடைய கூக்குரலைக் கவனிக்காது அத்தண்ணீர்ச் சாலையை அடைந்து ஓர் ஒதுப்புறமாய் "அப்பாடா" வென்று சோர்ந்து உட்கார்ந்தாள்.

இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு அத்தண்ணீர்ச்சாலையிலிருந்த ஜனங்கள் ஒரு நிமிடம் வியப்பும் திகைப்பும் அடைந்தனர். கூக்குரலிட்டவர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்பது கிதரிசனமாய்த் தோன்றிற்று. உள்ளே வந்து உட்கார்ந்த அப்பெண்மணி அவ்வகுப்பைச் சார்ந்தவளாயிருப்பாளா என்பது சிறிதும் நம்ப முடியாத தோற்றமாயிருந்தது. கல்வியறிவும் கண்கொள்ளா வனப்பும் நாகரிக முதிர்ச்சியும் நிறைந்த அம்மயிலாள் ஓர் கிறிஸ்தவ நங்கைபோன்று தோன்றினள். சிறிது நேரத்தில் அங்கிருந்த ஜனங்கள் ஓர்வித பரபரப்பையடைந்து சுசிலாவை யணுகி, "ஏய்! நீ என்ன ஜாதி?" என்று வினவினர். அதற்குள் வெளியில் தடிதடித்துக்கொண்டு நின்ற அப்பாமர மக்கள், "சாமீ! கோவிச்சுக்காதிங்க. இந்த நாட்டுக்குப் புதசுங்க அந்தப் புள்ளே! எசமானுங்க மன்னிச்சுக்கங்க. ஏ! சுசிலா வந்திரு, இங்கே வந்திரு" என்று கூறியவண்ணம் கைகூப்பி அம்மக்களை நோக்கி வணங்கினர். பொறுக்க முடியாத களைப்பினாலும் அவமானத்தினாலும் சுசிலா ஒன்றும் பேசாமல் மௌனமாய் இருந்தாள். அவள் ஒரு பறச்சி என்பதை யறிந்ததும் அங்கிருந்த ஜனங்கள் மிகவும் கோபமடைந்தார்கள். "ஒரு பற நாய்க்கு எவ்வளவு துணிவு! ஆளைப் பாருங்கிறேன். மூக்கும் முழியும் தேவடியாட்டமா யிருக்கா" என்று ஒவ்வொருவர் வாயிலிருந்தும் வார்த்தைகள் புறப்பட்டன. தண்ணீர்ச்சாலை அதிபர்கள் தாங்கமுடியாத கோபத்தோடு கம்புகள் எடுத்துக்கொண்டு ஓடிவந்தனர்,

"அடி செருப்பாலே! கழுதை மகளே! என்ன ஊத்தம்! எவ்வளவு திமிர்!" என்று பலவிதமாக மிக ஆபாசமான முறையில் மணிப்பிரவாளநடையுடன் வசை புராணம் பாடிக் கழிகளால் அடிக்கவும் எத்தனித்தனர். சுசிலா மிக அமைதியுடன் கைகளைக் கூப்பியவாறு, "ஐயன்மீர்! பெண்ணென்றால் பேயும் இரங்குமன்றோ! வெய்யிலின் கொடுமையை ஆற்றமாட்டாது தஞ்சம் என்று இத்தண்ணீர்ச்சாலையை அடைந்த சிறியாளை மன்னியுங்கள். அதிகப் புழக்கமில்லாத இந்த மூலையில் சிறிது நேரம் நின்று விட்டுப் போய் விடுகிறேன். சூடு தாங்க முடியவில்லை. பொறுத்துக் கொள்ளுங்கள்" என்று மிகக் கெஞ்சுதலாய் மொழிந்தாள். தண்ணீர்சாலை அதிபர்களுக்குக் கோபந்தான் இன்னும் அதிகமாயிற்று. "என்ன பேச்சுப் பேசுறாளையா ஒரு பறச்சி! படுசீலியாயிருப்பாள் போலிருக்கே. டேய்! சுப்பா! இங்கே வா. இவள் தலைமயிரைப் பிடித்து இழுத்துக்கொண்டு போய்த் தள்ளு வெளியில்" என்று ஆங்காரத்துடன் கூறினர். வந்தான் சுப்பனும்! பார்த்தாள் சுசிலா. அவள் நெஞ்சம் பதறிற்று. கலங்கிய கண்களோடு எழுந்தாள் "ஜனகோன்களே! அவ்வளவு தொந்தரவு உங்களுக்கு வேண்டாம். இதோ நானே போய் விடுகிறேன். பழநிநாதனைத் தெரிசிக்க வரும் பக்தர்களுக்கெல்லாம் உங்கள் அறச்சாலையில் பயனுண்டு என்று கருதினேன். தருமத்திலும் ஜாதி மதபேதத்தைப் பாராட்டக் கூடியது இந்து மதம் என்பதை யறிந்தேன். நமஸ்காரம் போய் வருகிறேன்" என்று எழுந்தாள்.

அப்பொழுது அத்தண்ணீர் சாலைக்கு வெளியில் நின்ற ஓர் மோட்டாரினின்றும் ஒரு வாலிபன் இறங்கி உள்ளே வந்து, "அம்மா! இந்து மதம் அப்பேர்ப்பட்ட கொடுமையான மதமன்று. தன்னயம் கருதிய சில வன்னெஞ்சக் கள்வரால் அது சுரையப் பட்டிருக்கிறது. விவேகாநந்த சுவாமிகளின் அருளால் மேலை நாடெங்கும் போற்றிப்பூஜிக்கப் பெற்ற மகா உயர்வான மதம் இந்து மதம். அதன் புனிதத் தன்மையைப் பரிபூரணமாக்குவதற்கு இப்பொழுது தலைவர்களெல்லாம் முயன்று வருகின்றார்கள்." என்றான். எதிர்பாராத இந்த மொழிகளைக் கேட்டுச் சுசிலா திடுக்கிட்டு நின்றாள். மற்ற ஜனங்களும் ஸ்தம்பித்து நின்றனர். அவ்வாலிபன் மீண்டும் பேசத் தொடங்கி, "அம்மா! நாங்கள் குன்றக்குடிக்குத் தான் போகின்றோம். காரில் நாங்கள் இருவர் தான் இருக்கிறோம். பின்சீட் முழுதும் காலியாய்த் தான் இருக்கிறது. ஆட்சேபமின்றேல் நீங்கள் எங்கள் காரில் வரலாம். இந்த வெய்யிலில் இனி அவ்வளவு தூரம் நடந்து வரமுடியாது. தங்குவதற்கு வேறு இடமும் இல்லை" என்றான். அதைக் கேட்ட மற்ற ஜனங்கள் புரளியாய் நகைக்கத் தொடங்கினர். சுசிலா அன்பு ததும்பிய குரலில், "நான் பறச்சியாச்சே. எப்படி என்னை யழைத்துச் செல்வீர்கள்? கேவலமாயிராதோ?" என்றாள் அவ்வாலிபன்—"பேஷ்! கேவலமா! பறஜாதிதான் இப்பொழுது ஹரிஜனம் என்ற புனித நாமத்தைக் கொண்ட புண்ணிய ஜாதி. தவிரவும் ஜாதி மதபேதம் பார்க்கும் கோஷ்டியைச் சார்ந்தவனல்ல நான். பார்ப்பானாயினும் பறையனாயினும் எல்லோரும் ஒன்றே; அனைவரும் சகோதரர்கள் தான். எங்களால் செய்வதற்குச் சாத்தியமாயுள்ள இவ்வுதவியை மறுக்காது ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்." என்றான். இதற்குள் தண்ணீர்சாலை அதிபர்கள் மறுபடியும் கூக்குரலிட ஆரம்பித்தனர். இனி அங்கு நிற்பது தகுதியில்லையெனக் கருதிய சுசிலா வெய்யிலின் கொடுமையைக் கருதி மனப்பூர்வமாய் அவ்வாலிபன் அழைத்த வேண்டுகோளுக்கு இணங்க விரும்பினாள். ஆயினும் மறு நிமிடம் அவள் எண்ணம் மாறிற்று. அத்தனை ஜனங்களும் தன்னிடம் பரிந்து பேசிய அவ்வாலிபனைக் கேலி செய்வதைப் பிரத்தியட்சமாகக் கண்டாள். தன் பொருட்டு அவ்வாலிபனுக்கு எள்ளளவு மானக்கேடும் உண்டாகக் கூடாதென்ற எண்ணம் அவள் மனத்தில் உறுதியாய்த் தோன்றிற்று. 'தங்கள் அன்பிற்கு மிக வந்தனம். உயர்ந்த ஜாதியார் எனப்படுபவரில் யாரும் என்னிடம் இவ்வளவு கனிவாய்ப்பேசியதைக் கண்டறியேன். இன்னும் கொஞ்சதூரம்தான் இருக்கிறது. கஷ்டத்தோடு கஷ்டமாய்ப் போய்விடுகிறோம். உங்களுக்கு சிரமம் வேண்டாம்' என்று கூறிக்கொண்டே அவன் பதிலை எதிர்பாராமல் அவள் தன் ஜனங்களை நோக்கி, 'வாங்கள் போவோம்' என்று அழைத்து வேகமாய் அவ்வாற்று வெளியில் நடக்கத் தொடங்கினாள். அபலையான அந்தப் பெண்ணை அப்பாவிகள் துரத்திவிட்டார்களே யென்றோ; அல்லது அவ்வாலிபனின் மனப்பூர்வமான வேண்டுகோளை அப்பெண் நிராகரித்து விட்டாளே யென்றோ ஆதவன் மிகக் கோபங்கொண்டு முன்னிலும் அதி உக்கிரமாகக் காய்ந்தான்.

சுசீலாவும் அவளுடைய ஜனங்களும் அக்கடுமையான வெய்யிலில் சோர்ந்து துவண்டு ஓட்டமும் நடையுமாய்ச் சென்று கொண்டிருந்தனர். அத்தனை ஜனங்களிலும் அவர்களுடைய நிலையைக் கண்டிரங்குவார் வேறு எவருமில்லை.

அவ்வாலிபன் மட்டும் அவர்கள் சென்ற திக்கைச் சிறிது நேரம் நோக்கினின்றான். இட்டடி நோவ எடுத்தடி கொப்புளிக்க மகாக்கஷ்டத்தோடு சுசிலா சென்ற நிலைமை அவனால் பொறுக்கமுடியாத அவ்வளவு துன்பத் தோற்றமாயிருந்தது. உண்மையிலேயே அவன் மகா நற்குணமும் மிக இரக்கச் சித்தமும் நேர்மையான நடத்தையும் சீர்திருத்தப் போக்கும் உடைய வாலிபன். தேசியக் கிளர்ச்சியில் ஈடுபட்டுத் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக உழைக்க வேண்டுமென்பதில் பெரிதும் வேட்கையுடையவன். சுசிலா அத்தண்ணீர் சாலைக்குள் நுழைந்த பொழுதுதான் அவன் அவ்விடம் வந்தான். அங்கு நடந்த நிகழ்ச்சிகள் முழுமையும் கண்ணுற்ற அவனுக்கு அப்பேதை மக்களுக்கு உதவி செய்யவேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. தனக்கு இழிவு ஏற்படக்கூடும் என்ற காரணத்தினாலேதான் அக்குணவதி தனது உதவியை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதையும் உணர்ந்தான். அவன் மனத்தில் அன்பும் இரக்கமும் இன்னும் அதிகமாகச் சுரந்து பெருகிற்று. உடனே காரில் ஏறி அதை முடுக்கினான். அடுத்த நிமிடம் கார் சுசிலா முதலியோரை அணுகிற்று. தள்ளாடித் தவண்டு தவித்த சுசிலா வியப்புடன் வாலிபனை நோக்கினாள் 'அம்மா! எனது வேண்டுகோளை மறுக்காதே. ஹரிஜனத் தொண்டில் ஈடுபட்ட நாங்கள் இவ்வற்ப உதவியையாவது செய்தவர்களாகட்டும். காந்தியடிகள் போன்ற பெரிய தலைவர்களெல்லாம் ஹரி ஜனங்களுக்குச் செய்துவரும் தொண்டுகளால் எங்கள் போன்ற வாலிபர்கள் உள்ளத்தில் அன்பு உணர்ச்சியானது கரைபுரண்ட வெள்ளமாய்ப் பொங்கி யெழுந்து வருகின்றது. அப்பிரவாகத்தின் முன்னிலையிலே ஈனம், சிறுமை, அவமானம் முதலிய எதுவும் தலை நிமிர்ந்து நிற்கமுடியாது. அம்மா! பிரசங்கம் செய்ய இதுகாலமில்லை. ஏறியுட்காருங்கள். இன்னும் இரண்டு மைல்தான் இருக்கின்றது' என்று கூறிக் கொண்டே மோட்டாரின் பின் சீட்டுக் கதவைத் திறந்துவிட்டான். உயிரே போய் விட்டதுபோல் அவ்வளவு துன்பத்தை யனுபவித்த சுசிலா மேலே ஒன்றும் சொல்ல மாட்டாதவளாய் நன்றி சுரந்த முகத்தோடு காரில் ஏறி யுட்கார்ந்தாள். அவள்கூட வந்தவர்கள் மூன்று பேரிருந்தனர். இருவர் பெண்மக்கள் ஒருவர் ஆண். அவர்களைக் காரில் ஏறச்செய்தது பெரும் பிரயத்தனமாகிவிட்டது. உயர்ந்த குலத்தார் எனப்படுபவருடன் தாங்கள் சமமாயுட்காருவது மிகப் பாவம் என்று அவர்கள் கருதியிருந்தனர். அவ்வாலிபன் மனதிலே என்றுமில்லாத குதூகலம் பொங்கி யெழுந்தது. சுசிலாவின் வரலாறுகளை ஒருவாறு விசாரித்து அறிந்து கொண்டான்.

திருச்சியில் ஒரு கிறிஸ்துவத் தம்பதிகளிடம் வேலைக்கிருந்த ஒரு ஆதித்திராவிடருடைய மகளென்றும், அவளுடைய சிறு வயதிலேயே அவளது பெற்றோர்கள் மரித்துவிட்டனரென்றும், அது முதல் அக் கிறிஸ்துவத் தம்பதிகளே அவளுக்கு ஆதாரவாயிருந்து வருகின்றனரென்றும் கூடவிருந்த மூன்று ஆதித்திராவிடர்களும் அவளுடைய தாய் வர்க்கத்தைச் சேர்ந்த உறவினர்களென்றும் - அவர்களைப் பார்த்துப் போவதற்காகச் சுசிலா திருச்சியினின்றும் இரண்டு தினங்களுக்குமுன் வந்ததாகவும் அவர்களுடைய வற்புறுத்துதலின் பேரில் பாற்குடங்களுக்குப் பின்னால் குன்றக்குடிக்கு வந்து வேடிக்கை பார்த்துவிட்டுக் குன்றக்குடியிலிருந்தவாறே திருச்சிக்குப் போகத் தீர்மானித்திருப்பதாயும் அறிந்து கொண்டான். மற்றும் அவள் அண்ணாமலைச் சர்வகலாசாலையில் படித்துத் தேறிய பி. ஏ. பட்டதாரி என்றும் தெரிந்து கொண்டான்.

'நாகரிகமும் கல்வியும் பெற்ற நீ இந்த ஜனங்களுடன் சேர்ந்து வராவிட்டால் உன்னை யாரும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவள் என்று கண்டு இழிவுபடுத்த முடியாதே. ஏன் இந்த ஜனங்களுடன் வந்து அவமானத்திற்குள்ளாக வேண்டும்?" என்று அவ்வாலிபன் சுசீலாவை ஆங்கிலத்தில் வினவினான்.

சுசீலா:—ஆம் வாஸ்தவந்தான், இவர்களுடன் சேர்ந்து வராவிட்டால் என்னை யொருவரும் இழிந்த குல மாது என்று கருதமாட்டார்கள். எவ்விதத் தலைகுனி

(கக-ம் பக்கம் பார்க்க)





# அங்கும் - இங்கும்.

### சம்பளக் குறைவு.

சுதந்தர அயர்லாந்தின் தலைவரான கனம் டிவேலரா தனது சம்பளத்தை உமு௦௦ பவுனிலிருந்து கரு௦௦ பவுனாகக் குறைத்துக் கொண்டாராம். ஆனால், இந்தியாவில் குறைக்கப்பட்ட சம்பளத்தைக் கூட்டுவதற்கு வழி பார்க்கப்படுகிறது. சில இலாகாக்களிலுள்ள உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பளம் இருப்பதைவிட அதிகப்படுத்தவும் யோசிக்கப்படுகிறது.

* * *

### நகைப் பைத்தியம்.

நகைப் பைத்தியம் பெண்களிடையே எல்லா நாடுகளிலும் மிகுதியாக விருந்தது. இப்பொழுது கீழ்நாடுகளில் இருந்தும் வருகிறது. இந்தப் பைத்தியத்தை விளக்க ஓர் சிறு கதைகூடச் சொல்லுவதுண்டு. ஒரு வீட்டில் பெண்பிள்ளை ஒருத்தி தனக்கு நகை செய்து போடாததற்காகக் கணவனிடம் கோபித்துக்கொண்டு சமையல் செய்யாதிருந்தாளாம். புருஷன் "ஏன் சமையல் செய்யவில்லை" என்று கேட்டதற்கு அம்மிக்குழவியை எடுத்து அரைக்க முடியவில்லை என்றாளாம். இதனைப் பரிசோதனை செய்ய அந்தப் புருஷன் குழவியை உள்ளே வைத்துத் தங்கத்தைக் கொண்டு மூடி ஓர் பெரிய நகைசெய்து மனைவியிடம் கொடுத்து அதனைக் கழுத்தில் மாட்டிக்கொள்ளும்படி சொன்னான். அதன்படி அவளும் அந்த அம்மிக் குழவியைக் கழுத்தில் அணிந்துகொண்டாள் என்று அந்தக்கதை முடியும். அதுபோல், நமது பகுதியில் பலர் காதுகளிலும் கழுத்துகளிலும் மிகப் பாரமான நகைகளை அணிகிறார்கள். இதுபோன்று நகைப் பைத்தியம் பிடித்த ஓர் இலங்கை மாது சுமார் ஒன்றரை அடி நீளமுள்ள ஓர் பல்லியைப் பிடித்துக் கழுத்தில் நகையாக அணிந்து இருக்கிறாளாம்.

* * *

### கைதிகளுக்குப் பத்திரிகை.

இங்கிலாந்து சிறையிலிருக்கும் கைதிகள் நல்வழி யடையும் பொருட்டு அவர்களுக்கு நல்ல பத்திரிகைகள் வாசிக்கக் கொடுக்க வேண்டுமென்று சிறைச்சாலை அதிகாரிகள் தீர்மானித்திருக்கிறார்களாம். அன்றிக் கைதிகளாகச் சிறையிலிருப்பதால் உலக விவகாரங்கள் எதுவும் தெரியாது போகின்றன. ஆதலால், அவர்கள் வெளியே வந்ததும் பலவிதமான துன்பங்களுக்கு ஆளாகிக் கஷ்டப்பட நேருகின்றதென்றும், எனவே கைதிகளாக விருக்கும்பொழுது உலகச் சமாசாரங்கள் அறியும் பொருட்டுப் பத்திரிகைகள் படிக்க வேண்டுவது அவசியமென்றும் அதிகாரிகள் முடிவு செய்துள்ளார்கள். இது எங்கே? நம்மை ஆளும் ஆங்கிலேயர்கள் வாழும் நாட்டில். எந்தக் கைதிகளுக்காக? சாதாரணக் குற்றங்கள் செய்தவர்களுக்குத்தான். ஆனால் இதே ஆங்கிலேயர்களால் ஆளப்படும் இந்தியாவில் "சுதந்தரம் வேண்டும்" என்று சொல்லும் காரணம்பற்றிச் சென்றவர்களுக்குச் சாதாரணமான—மிக மட்டமான—பத்திரிகைகள் கூட வாசிக்கக் கொடுப்பது தவறு என்று அதிகாரிகள் முடிவு செய்திருக்கிறார்கள். அரசியல் கைதிகள் நிலைமையே இதுவாயின் சாதாரணக் கைதிகளைப்பற்றி என்ன சொல்வது?

* * *

### ஆடவர் பெண்டிர் போட்டி!

பெண்களுக்கும் ஆண்களுக்கும் சம உரிமை வேண்டும் என்று சொல்லுகிறார்கள். இதற்காகப் பலர் பாடுபட்டும் வருகிறார்கள். இந்தச் சமத்துவம் ஏற்படுவது எப்படி? பெண்கள் வேலையை ஆண்களும், ஆண்கள் வேலையைப் பெண்களும் செய்வதால்தான், பெண்கள் அடுப்பூதும் வேலையை மேற்கொள்ளுகிறார்கள். ஆடவர்கள் இது செய்வது தவறு என்று எண்ணுகிறார்கள். ஆனால் பணக்காரர் வீடுகளில் ஆடவர்களுக்கே இந்த சமையல் வேலை கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆயினும், எல்லாப் புருஷர்களும் சமையல் வேலையைக் கற்றுக் கொள்ளவேண்டும் என்ற நோக்கத்தோடு இங்கிலாந்திலுள்ள பிஞ்சிலி என்ற ஊர் பாடசாலையில் சமையற்றொழில் சிறுவர்களுக்குக் கற்பிக்கப்படுகிறதாம். அதே பாடசாலையிலுள்ள எல்லாச் சிறுமிகளும் தச்சு வேலை கற்றுக்கொள்ள வேண்டுமென்றும் நிச்சயிக்கப்பட்டிருக்கிறதாம். இவ்வாறு புருடர் தொழிலைப் பெண்களும், பெண்கள் தொழிலை ஆடவர்களும் கற்றுக்கொள்ளுவதால் ஒருவருக்கொருவர் உதவிசெய்ய ஏதுவாக விருக்குமென்றும் அதனால் கஷ்டம் ஏற்படாது என்றும் சொல்லுகிறார்கள்.

### ஹநுமார் வணக்கம்.

இந்திய நாட்டில் குரங்குகளைத் தெய்வமாகக் கொண்டாடுகிறார்கள். பல கோவில் தோட்டங்களில் அவை கூட்டங்கூட்டமாக விருந்து துன்பப்படுத்தினாலும் அவற்றைக் கொல்லலாகாதென்று எண்ணுகிறார்கள். அநுமார் போன்ற குரங்குகளை வைத்து அபிஷேக ஆராதனைகள் முதலியனவும் செய்கிறார்கள். சில மாதங்களுக்கு முன் திருச்சினாப்பள்ளியில் மின்சாரக் கம்பிகளில் மாட்டிக்கொண்டு காவேரியாற்றின் கரையிலிருந்த சுமார் இருபது குரங்குகள் இறந்தபொழுது அவற்றை எடுத்து அடக்கஞ் செய்த இடத்தில் அனுமார் கோவில் ஒன்று கட்டவும் நிச்சயித்திருக்கிறார்கள். இதனைக் கண்டு வெள்ளையர்கள் பரிகாசம் செய்கிறார்கள். ஆனால் மெடிட்டரேனியன் கடலும் அட்லாண்டிக் கடலும் சந்திக்கும் இடத்திலிருக்கும் ஜிப்ரால்ட்டரில் வதியும் ஆங்கிலேயர்கள் குரங்குகளை வைத்து வணங்கிவருகிறார்கள். ஜிப்ரால்ட்டர் கோட்டையிலிருக்கும் குரங்குகளைப் பாதுகாத்து அவற்றிற்கு வேண்டுவன சரியாகக் கொடுக்கப்படுகின்றனவா என்பதை ஆராய்வதற்காக ஓர் ராணுவ அதிகாரியும் நியமிக்கப்பட்டுள்ளாராம். இவர்கள் ஏன் இவ்வாறு குரங்கை வணங்குகிறார்கள் என்பதை விசாரித்ததில் மிக விசித்திரமான சில விஷயங்கள் தெரியலாயின. ஜிப்ரால்ட்டர் கோட்டையிலுள்ள குரங்குகள் யாவும் எப்பொழுது மடிந்துபோகின்றனவோ அப்பொழுது ஜிப்ரால்டர் ஆங்கிலேயர் கையிலிருந்து போய்விடும் என்று அவர்கள் நம்பி வருகிறார்களாம். இரண்டாண்டுகளுக்கு முன்னர் இரண்டு குரங்குகள் தவிர வேறு யாவும் இறந்துவிட்டனவாம். இதனைக் கண்டதும் அங்குள்ள இங்கிலீஷ்காரர்கள் மிகவும் பதறி ஆப்பிரிக்கா சென்று அங்கிருந்து குரங்குகளைக் கொண்டுவந்து வளர்த்து வருகிறார்களாம்.

### வைதிகர்களுக்குப் பாடசாலை.

ஹரிஜன முன்னேற்றம், விதவை மணத்தடை, போன்ற சீர்திருத்தங்கள் ஏற்படும் போதெல்லாம் இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் சாஸ்திரிகள், கனபாடிகள், தீட்சிதர்கள் முதலியோர் புத்திலிருந்து ஈசல் வருவது போல் புறப்பட்டு விடுகிறார்கள். இவர்களுக்கு சாஸ்திர சம்பந்தமாக எவ்வளவு ஞான மிருக்கிறது என்று எவரும் கேட்பதில்லை. ஆதலால், வைதிகர்களாக விருந்து வைதிகச் சடங்குகளை நடத்துபவர்கள் இன்னின்ன அறிவு பெற்றிருக்க வேண்டும் என்று வரையறுத்து அவர்களுக்காகத் தனியாக ஓர் பரிட்சை ஏற்படுத்த காசி சர்வகலாசாலையார் நியமித்துள்ளார்கள். இனி பரோடாவை எடுத்துக் கொண்டால் அங்கே வைதிகக் கிரியைகளை நடத்தி வைக்கும் புரோகிதர்கள், ஒருவருக்கும் புரியாத வடமொழியில் மந்திரங்களைக் கூறிப் போவதால் பலனில்லை; மணம் நடைபெறும் காலத்தில் மணமக்கள் இருவரும் மேற்கொள்ள வேண்டிய உறுதி மொழிகளை அவர்கள் அறியும் வண்ணம் தாய் மொழியில் வாத்தியாராக வருவோர் எடுத்துரைத்தல் வேண்டும்; ஆதலால் வாத்தியாராக வருவோர் வெறும் கிராமபோன் மிஷின் போன்று மந்திரங்களைச் சொன்னால் மட்டும் போதாது; அதன் பொருளை உணர்ந்திருக்க வேண்டும்; இல்லாவிடின் அவர்களுக்கு ரூ௫0 அபராதம் விதிக்கப்படும் என்று பரோடா சமஸ்தானம் ஓர் உத்திரவு போட்டிருக்கிறது. நமது பகுதியிலுள்ள வைதீகர்களுக்கும் இத்தகைய ஆபத்து விரைவில் வந்து விடும். ஆதலால் அதற்குத் தக்க ஏற்பாடு இப்பொழுதே செய்து கொள்வார்களாக.

* * *

### இந்தியருக்கு வரவேற்பு.

இந்தியாவிலிருந்து ஒருவர் ஐரோப்பிய நாடுகள் பலவற்றுள்ளும் சுற்றுப்பிரயாணம் செய்து சமீபத்தில் தாய்நாடு வந்து சேர்ந்திருக்கிறார். அவர் கூறியதிலிருந்து தெரிவதாவது—ஜெர்மனியில் இந்தியன் என்று ஒருவன் கூறுவானாயின் அவனுக்கு பெரிய உபசாரங்கள் நடக்குமாம். அவனுக்கு வேண்டுவனயாவும் தயார் செய்தும் கொடுக்கப்படுமாம். இதற்கடுத்தபடியாக ருஷ்யாவிலும் இந்தியர்கள் மதிக்கப்படுகிறார்களாம். அங்கு, இந்தியர் சீனர், எனும் இருநாட்டார்களிடையேயும் பெரும் அனுதாபம் காட்டப்படுகிறதாம். இத்தாலி, ஸ்பெயின், ஸ்விட்ஸர்லந்து முதலிய நாடுகளில் சமமாக நடத்தப்படுகிறார்களாம். ஆனால் நாகரிகத்தின் இருப்பிடமாகிய பாரிசில் சென்றால் நாட்டைப் பற்றிய பேச்சே கிடையாது. கையில் வெள்ளையப்பரும், தங்கப்பரும் ஏராளமாக விருந்தால் மதிப்பு! அவை வைத்திருப்பவர் எவராக விருப்பினும் அதைப்பற்றிக் கவலையில்லை. துட்டு இல்லாவிட்டால் பெரிய தேவலோகப் பிறவியாகவிருந்தாலும் அங்கே மதிப்புக்கிடையாது!

இனி இந்தியாவின் எஜமானர்களாகிய ஆங்கிலேயர் நாட்டில் நம்மவர் எவ்வாறு நடத்தப்படுகிறார் என்பதைப் பாருங்கள். இங்கிலாந்தில் வீடு வாடகைக்குப்பிடிப்பதற்காக ஒரு இந்தியர் சென்றாராம். அப்பொழுது வாடகைக்கு விடும் ஓர் வயதுமுதிர்ந்த பெண்பிள்ளை கதவைத் திறந்துவந்து அவர் முகத்தைப் பார்த்தாளாம். இந்தியர் என்பதாக அறிந்ததும் படீர் என்று கதவை மூடிக்கொண்டு உள்ளேபோய்விட்டாளாம்!

மற்றொரு இடத்தில் நண்பர் ஒருவர் நமது இந்தியரை ஒரு இளம் நங்கையிடம் அறிமுகப்படுத்தி வைத்தாராம். அம்மாதும் இவரிடம் மிக அன்பாகப் பேசிக்கொண்டிருந்தாளாம். கடைசியில் அவள் "உங்கள் ஊர் சிக்காகோவா அல்லது நியூயார்க்கா, என்று வினவினளாம். அதற்கு அவர் 'நான் நீக்ரோ இந்தியனல்ல. உண்மை இந்தியன்" என்று பதில் சொன்னாராம். இதைக் கேட்டதும் அவள் பேயைக் கண்டு எவ்வாறு பயந்து ஓடுவாளோ அதுபோல் ஓட்டம் பிடித்தாளாம். பார்த்தீர்களா இந்தியர்களுக்கு இங்கிலாந்தில் கிடைக்கும் கவுரவத்தை?

* * *

### "சுதேசியத்தை ஆதரியாதவன் தேசத்துரோகி"

வடநாட்டில் நடைபெற்ற சநாதன தர்மிகள் இளைஞர் மகாநாட்டில் "சுதேசியத்தை ஆதரிப்பது ஒவ்வொரு இந்தியரின் கடமை. அதனை ஆதரிக்காதவன் பெரிய தேசத்துரோகி" என்று ஒரு தலைவர் பேசினார். ஆனால் நமது தமிழ் நாட்டிலுள்ள கொழுத்த சநாதன தர்மிகள் நல்ல கிளாஸ்கோ மல்லைக் கட்டுவதே சிறந்ததாகக் கருதுகிறார்கள். அயல்நாட்டுச் சாமான்களை வாங்கலாகாது என்று கூறுவது மகாபாபம். அதனால் நாம் பிறநாட்டினர்க்குக் கெடுதல் செய்த பாபத்திற்கு ஆளாவோம்" என்கிறார்கள். அயல் நாட்டுச் சாமான்களை வாங்குவதால் இந்தியாவிலுள்ள தொழிலாளிகள் பட்டினி கிடக்க நேருகிறதே என்றால் அதைப் பற்றிக் கவலை இல்லை என்கிறார்கள். இதுதான் வட நாட்டு வைதீகர்களுக்கும் தென் நாட்டு வைதிகர்களுக்கு முள்ள வித்தியாசம்.

* * *

### 'காதல்வாழ்க்கைக்குகந்தகாலமன்று'

ஷாங்காய் என்ற நகரின் சமீபத்திலுள்ள ஓர் ஊரில் ஷயாமீயான் என்ற பெண்மணிக்கு மணமாகி சுமார் ஒரு மாதமேயாகின்றது. அவர் தந்தையார் பெரும் கனவந்தர். அவரை மணஞ்செய்து கொண்டவரும் பெரிய பிரபுதான். தற்பொழுது வட சீனாவிலுள்ள இடத்தைத் திரும்பவும் பெறும்பொருட்டு நடைபெறும் போரில் கலந்துகொள்ளும் நோக்கத்தோடு இம்மாது ஒருநாள் இரவு தனது வீட்டை விட்டுச் சென்றுவிட்டாராம். மறுநாள் தனது கணவனுக்கு எழுதியுள்ள கடிதத்தில் 'காதல் வாழ்க்கை நடத்தும் காலமல்ல இது. நாம் இழந்த பாகம் திரும்பவும் பெற்ற பின்னர் தங்களுக்கு என் அன்பைச் செலுத்தவருவேன்' என்று பத்தொன்பது வயதே பிராயமுள்ள அந்த மங்கை குறிப்பிட்டுள்ளார். ஆனால்நமது நாட்டிலுள்ள கனவந்தர்கள் என்ன செய்கிறார்கள்? விருந்துகள், குதிரைப் பந்தயங்கள், நாடகங்கள் முதலிய களியாட்டங்களில் கலந்து இன்பம் அனுபவிக்கிறார்கள். ஆடவர்கள் நிலையே இதுவாயின் பெண்கள் நிலையைப்பற்றிக் கூறவென்ன இருக்கிறது?

# பெண்கள் கடமை.

## சிக்கனத்தைக் கைக்கொள்க.

இராஜீய விஷயத்திலாகட்டும் சமூக விஷயத்திலாகட்டும் பெண்மக்கள் உதவியின்றி எவ்வித முன்னேற்றமும் ஏற்படாதென்பது உண்மையான விஷயம். ஓர் சமூகம் தெய்வபக்தியிலோ மத பக்தியிலோ வீரத்திலோ வேறு எந்த விஷயத்திலோ முன்னேற்றமடைய வேண்டுமானால் அந்த சமூகத்தைச் சேர்ந்த சகோதரிகளின் உதவிதான் பிரதானமானது. அவர்கள் ஊக்கத்தினால் தான் ஒரு சமூகம் சகல விதங்களிலும் முன்னேற்றமடையும். அவர்கள் உபதேசத்தினால்தான் தேசத்திலுள்ள வாலிபர்களை வீரர்களாக்கலாம். அவர்கள் முயற்சியால்தான் தற்போது மதமென்னும் விஷத்தால் பீடிக்கப்பட்டு மக்கள் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக இருப்பதை உடைத்தெறியலாம். அவர்கள் சக்தி அபாரமானது. அதற்கு எல்லையும் இல்லை. அச்சக்தியின் வன்மையை அவர்கள் இதுவரை அறியவில்லை. அறியும்படிச் செய்ய ஆண் பிள்ளைகள் எனச் சொல்லப்படுவோர் முயலவும் இல்லை. அவர்கள் கடமை என்ன வென்பதைப்பற்றி உபதேசிப்பாரும் இல்லை. பெண்கட்குக் கல்வியைக் கொடுக்க இந்த நாகரீக உலகத்திலும் சிலர் அஞ்சுகிறார்கள். சிலர் பெண்களை கேவலம் அடிமைகளாக மதித்து நடத்துகிறார்கள். சம்சார வாழ்க்கை என்பதின் பொருளை அறியாத மேதாவிகளும் உண்டு. இப்பேர்ப்பட்ட கணவனிடம் அவதியுறும் பெண்களுக்கு கணக்கு இல்லை. ஆனால் கல்வி கொடுக்காத தோஷத்திற்காக பெண்களில் சிலரிடம் தகுந்த தண்டனை அவ்வாடவர்கள் அடைகிறார்கள். அது என்னவெனில் இயற்கை அறிவும் செயற்கை அறிவும் இல்லாத மனைவிகளிடம் படும் அவஸ்தையேயாகும். ஸ்திரீகளுக்குக் கல்வி அறிவு இருந்தால் இருதலைக் கொள்ளியில் அகப்பட்ட எறும்புபோல் அவஸ்தையுற நேராது. இந்த உண்மையை ஆண்களிற் பலர் இன்னும் உணர்ந்து கொள்ளாததே ஆச்சரியத்திலும் ஆச்சரியம். இது யார் குற்றம்? பெண்களுக்குத்தகுந்தவாறு உலக அறிவு புகட்ட முயற்சிக்காததினாலேயே தங்கள் மனைவியர்களிடம் கஷ்டப்படுகிறார்களே ஒழிய வேறு இல்லை. பழங்கதை பேசுவதால் பயன் இல்லை. ஆதலால் இனி நடைபெற இருக்கும் கதைகளையே பேசவேண்டும். ஆண் பிள்ளைகள் பழய நிலைமையிலேயே இருந்தாலும் சரி, சீர்திருத்த முயன்றாலும் சரி, அதை பெண் எதிர்பார்க்க வேண்டியதில்லை. தங்கள் வேலையைச் செய்ய ஆரம்பிக்க வேண்டியதே பெண்கள் கடமை. அவைகளிற் சிலவற்றை இங்கு குறிப்பிட விரும்புகின்றேன்.

பெண்கள் கடமைகளில் பொறுப்புடன் இல்வாழ்க்கையை நடத்துவதே பிரதானம்.

தன்நாயகருக்கு யார் யார் வேண்டியவர்களோ அவர்களைச் செவ்வையாய் அறிந்து கொண்டு நாயகர் மனம் சந்தோஷம் அடையும்படி அவர் சொல்லு முன் குறிப்பறிந்து வீட்டிற்கு வந்தவர்களை உபசரிக்க வேண்டியது இல்லற வாழ்க்கை நடத்தி வரும் ஒவ்வொரு ஸ்திரீயின் கடமை. நண்பர்களை வீட்டிற்கு அழைத்து வந்த பின்பு சில மனைவிமார்கள் சரியாக உபசரிக்காமல், சிடுசிடு வென்று முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டு திரிகிறார்கள். தன் நாயகன் மனம் எவ்வளவு துன்பப்படும்; நாம் எவ்வளவு அவமானம் செய்து விட்டோம்; நம் நாயகரைப் பற்றி என்ன அபிப்பிராயம் கொள்வார்களென்று அவர்கள் நினைப்பதே இல்லை. இவைகளை எல்லாம் சிந்தித்து நாயகரின் விருப்பத்திற் கிணங்க நடந்து கொள்வதே புத்தியுடைமை ஆகும்.

வாவிற்குத் தக்க செலவு செய்ய யோசனையில்லாமல் சில ஸ்திரீகள் உலகிலுள்ள சகலபுடவைகள் நகைகள் இவைகள் மீது ஆசை கொண்டு தங்கள் தங்கள் நாயகனை இம்சிக்கிறார்கள். "இந்த நகை வேண்டும். அவளைப் பார். இவளைப்பார். உங்களைமாலையிட்டதற்கு இதுதானா பலன்? என் தலையெழுத்து உங்களிடம் கஷ்டப்பட வைத்தது" என்று சரமாரியாக வார்த்தைகளைப் பொழிந்து நாயகனைத் துன்புறுத்துகிறார்கள். இத்தகைய கஷ்டங்களைப் பொறுக்க முடியாமல் சிலர் அறிவிழந்து நெறிதவறிப்பொருள்சேர்த்து தங்கள் மனைவிமார்களைச் சந்தோஷப் படுத்த முயலுகிறார்கள். இவைதானா மனைவிகளைப் பெறுவதால் அடையும் நன்மைகள்? புருஷன் சத்தியம் தவறி ஒழுக்கம் கெட்டுப் போகும்படி செய்வதுதானா உத்தம மனைவிமார்கள் செய்ய வேண்டிய வேலை!

வாவிற்குத் தகுந்த செலவு செய்யப் பழக வேண்டும்—உலகத்தில் எல்லோரும பணக்காரர்களாக இருக்க முடியாது. சிலர் பணக்காரர்களாகவும் பலர் எளியவர்களாகவும் தான் இருப்பார்கள். ஆகவே வீண் ஆசையை ஒழித்து கடவுள் நமக்குக் கொடுக்கிறதையே பெரிதாக எண்ணி சுயமதிப்புடன் நடந்து கொள்ள வேண்டும். அத்தகைய குணந்தான் கௌரவமும் சுயமதிப்பும் உள்ளது. (பட்சிராஜன்.)

---

### ௩௫௦௦ ராத்தல் கனமுள்ள மீன்.

இத்தாலிய நாட்டிலுள்ள மெஸ்ஸினா என்ற இடத்தில் மீன் பிடிக்க வலை வீசியதில் ஓர் பெரிய மீன் கிடைத்ததாம். இந்த மீனின் கனம் ௩௫௦௦ ராத்தல் என்று சொல்லப்படுகிறது.

ஃ ஃ ஃ

### ௧௮ ஆண்டுகள் தூங்கியமாது!

பழைய கதைகளில் பல்லாண்டுகளாகத் தூங்கிய மாதர்கள் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. ஆனால் இப்பொழுது ஜொகான் ஸ்பர்க் என்ற ஊரில் ஓர் மாது பதினெட்டு ஆண்டுகள் தூங்கியதாக ஓர் செய்தி கிடைத்துளது. ௧௯௧௦-வது வருடத்தில் தன் கணவன் கொல்லப்பட்டான் என்பதைக் கேள்விப்பட்டதும் ஓர் மாது விசனத்தால் சோர்ந்து விழுந்தாளாம். அவள் பதினெட்டு ஆண்டுகளாக சோர்ந்து தூங்கிய பின்னர் ௧௯௨௮ ஆகஸ்டு மாதத்தில்தான் விழித்துக்கொண்டாளாம்.

ஃ ஃ ஃ

### "இமாலயம் பேசுகிறது"

"இமாலயம் பேசுகிறது" என்ற பெயரால் தற்பொழுது பேசும் சினிமா தயார் செய்யப்படுகிறதாம். இதில் இமாலயத்தின் இயற்கை வனப்பும் அங்கு உறைந்து கிடக்கும் பனிக்கட்டிகள் பனிக்கட்டிகளை இழுத்துச் செல்லும் ஆறுகள், மரங்கள், இன்னும் இதாகாட்சிகளும் சேர்க்கப்படும் என்று சொல்லப்படுகிறது.





# சட்டமறுப்பு இயக்கம்.

### சேத் ஜம்னாலால் பஜாஜ்.

திரு ஜம்னாலால் பஜாஜ் உடல்நிலை மிகவும் சோர்வுற்றிருப்பதால் மூன்று மாதங்கள் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று டாக்டர்கள் சிபார்சு செய்திருக்கிறார்களாம். அவர் காது நோயால் கஷ்டப்படுவதாகவும் சொல்லப்படுகிறது.

ஃ ஃ ஃ

### சிவப்புச் சட்டையர் கூட்டம் கலைக்கப்பட்டது.

பாஞ்சாலத்தில் மர்தான் சமீபத்திலுள்ள பாபுதரி என்ற ஊரில் சுமார் ௫௦௦ சிவப்புச் சட்டையினர் கூட்டம் கூடியபோது போலீசாரால் கலைக்கப்பட்டனர். சிலர் கைதும் செய்யப்பட்டனர்.

ஃ ஃ ஃ

### கறுப்புக்கொடி பிடித்ததாக.

லாகூரில் வைசிராய் விஜயஞ் செய்த பொழுது கருப்புக்கொடி பிடிக்க முயன்றதற்காக இரண்டு தொண்டர்கள் ஒருவருடத்திற்கு நன்னடத்தை ஜாமீன் அளிக்க வேண்டும் என்றும் அல்லது ஒரு வருட சிறைத் தண்டனை அனுபவிக்க வேண்டுமென்றும் தீர்ப்புச் சொல்லப்பட்டதாம். இருவரும் சிறைத்தண்டனை யனுபவிக்கத் தயார் என்று சிறைக்குச் சென்றார்களாம்.

ஃ ஃ ஃ

### அந்தமான் கைதிகள்.

அந்தமானுக்கு அனுப்பப்பட்டுள்ள புரட்சி கைதிகள் யாவரும் ஓர்சிறிய தீவிலுள்ள தனிச் சிறையில் அடைக்கப் பட்டிருக்கிறார்களாம். இவர்களுக்கும் அந்நாட்டின் இதர ஜனங்களுக்கும் எவ்விதத் தொடர்பு மில்லாதபடி செய்யப் பட்டிருக்கிறதாம். எல்லோரும் விசேஷ வகுப்புக் கைதிகளாகவே நடத்தப் படுகிறார்களாம். புரட்சிக் கைதிகளின் மொத்தத் தொகை தற்பொழுது நூறு என்று சொல்லப் படுகிறது.

ஃ ஃ ஃ

### திரு. ரங்காவின் உண்ணாவிரதம்.

அரசியல் கைதிகளைக் கொடுமையாக நடத்துவதைக் கண்டிக்கும் பொருட்டு கந்தவா சிறையிலிருக்கும் திரு. புனம்சந்த் ரங்கா என்பார் மார்ச்சு ௩-ம் தேதி உண்ணாவிரதம் இருக்க ஆரம்பித்தாராம். இந்த விரதத்தை நிறுத்தும்படி காந்தியடிகள் சேத்ஜம்னாலால் வழியாக ஓர் கடிதம் திரு. ரங்காவிற்கு அனுப்பினாராம். இதனைப் பெற்றுக் கொண்டதும் அரசாங்கத்தார் தனது யோசனையைக் கவனிப்பார்களாயின் தனது உண்ணாவிரதத்தை நிறுத்திக்கொள்வதாக திரு. ரங்கா கூறினாராம்.

ஃ ஃ ஃ

### எம். ஏ. மாணவன் விடுதலை.

லாகூர் 'பிரதாப்' எனும் தினசரிப் பத்திரிகைச் சொந்தக்காரரின் புதல்வரும் எம். ஏ. வகுப்பில் படித்துக்கொண்டிருந்தவருமான திரு. வீரேந்திரா என்பவர் ௧௯௩௨வது வருட மூன்றாவது ரெகுலேஷன்படி சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். தற்பொழுது அவர் உடல் நிலை காரணமாக விடுதலை செய்யப்பட்டுள்ளார். எனினும் விடுதலைபெற்ற உடனேயே அவர் லாகூர் முனிசிபல் எல்லையை டெப்டி இன்ஸ்பெக்டர் ஜனரலின் உத்தரவின்றி தாண்டலாகாதென்று ஓர் தடை உத்தரவும் சார்வ் செய்யப்பட்டுளது.

ஃ ஃ ஃ

### சதிவழக்குக் கைதிகள்.

லாகூர் சதிவழக்குக் கைதிகளான திரு ஜயதேவ்கபூர் ராஜமந்திரி சிறையிலும் திரு பிஜாய் குமார சின்ஹா விசாகப்பட்டினம் சிறையிலும், திரு. ஷியோவர்மா பெர்ஹாம்பூர் சிறையிலும் சென்ற ஐந்து மாத காலமாக உண்ணாவிரத மிருந்து வந்தார்கள். இப்பொழுது அந்தமான் தீவுக்கு அனுப்பப் போவதை முன்னிட்டு அவர்கள் தங்கள் உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டார்கள். தற்பொழுது அவர்கள் சிறை ஆசுபத்திரியில் சிகிச்சை செய்யப் பட்டு வருகிறார்கள். அதோடு அவர்களுக்கு பஞ்சாபி உணவும் கொடுக்கச் சென்னை அரசாங்கம் உத்திரவு போட்டிருக்கிறதாம்.

# காந்தியடிகள் கடிதம்

## அனுப்பவில்லை

### சட்டசபையில் சர்க்கார் பதில்.

#### காந்தியடிகள் கடிதம் பற்றிய சில ரகசியங்கள்.

மகாத்மா காந்தியடிகள் வைசிராய்க்கு வெள்ளைக்காகிதம் சம்பந்தமாக ஓர் கடிதம் அனுப்பிருந்ததாக 'பம்பாய் கிரானிகல்' எழுதியிருந்ததை 'ஊழியனில்' சென்றவாரம் பிரசுரம்செய்திருந்தது நண்பர்கள் அறிவார்கள். அந்தக் கடிதம் பற்றி இந்தியச் சட்டசபையில்திரு பி. தாஸ் கேள்வி கேட்டதற்கு சர் ஹாரி ஹாக் கீழ்கண்ட பதில் கூறினர்.

"பம்பாய் கிரானிக்கல் கூறியுள்ளவை உண்மையல்ல. வைசிராயோ இந்திய அரசாங்கமோ திரு காந்தியிடம் தற்கால நிலைமைபற்றியோ அல்லது வெள்ளைக் காகிதம் பற்றியோ அவர் அபிப்பிராயம் அறிவிக்கும்படி கேட்கவில்லை. திரு காந்தி தானாகவும் வைசிராய்க்கோ இந்திய அரசாங்கத்திற்கோ எதுவும் இதுபற்றி எழுதவுமில்லை."

திரு ஜாக்:—"பத்திரிகைகள் இத்தகைய கதைகளை எவ்வாறு வெளியிடத் துணிந்தன என்பதைப்பற்றி அரசாங்கம் விசாரணை செய்யுமா?

சர் ஹாரிஹேக்:—அத்தகைய விசாரணை செய்யும் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்ள முடியாது.

திரு எஸ். சி. மித்ரா:—பம்பாய் அரசாங்கத்திற்கு இத்தகைய கடிதம் ஏதேனும் கிடைக்கப் பெற்றுளதா?

சர் ஹேக்:—இல்லை. பம்பாய் அரசாங்கத்திற்கும் அத்தகைய கடிதம் எதுவும் கிடைக்கவில்லை.

##### முற்றுமே பொய்யா?

காந்தியடிகள் தற்கால நிலைமை பற்றி கொண்டுள்ள அபிப்பிராயத்தை அரசாங்கம் ஏதோ ஒரு வழியாக அறிந்துள்ளது. இது மூன்றாவது மனிதர் வழியாக இருக்கலாம் என்றும், எனவே 'மகாத்மா வெள்ளையறிக்கை பற்றியும் தற்கால நிலைமை பற்றியும் கொண்டுள்ள அபிப்பிராயம் எவ்வழியாகவேனும் அரசாங்கத்திற்குக் கிடைத்ததுண்டா; அக்காரணத்தால் காந்தியை விடுதலை செய்வதில்லை என்று அரசாங்கம் முடிவு செய்ய நேர்ந்ததா' என்று சட்டசபையில் கேட்டிருந்தால் உள்நாட்டு மெம்பர் "இது அரசாங்க இரகசியத்தைச்சார்ந்தது. வெளியிடக் கூடாதது" என்று பதில் கூறியிருப்பார் என்றும் "சண்டே டைம்ஸ்" எழுதுகிறது.

##### கடிதமா? வாய்மொழியா?

காந்தியடிகளைப் பார்க்க திரு. போலக் இருமுறை சென்றிருந்தார். அவர் இந்தியாவிற்கு வந்த விஷயமும் மிக இரகசியமாகவே வைக்கப்பட்டிருந்தது. ஆதலால், ஒருவேளை திரு. போலக்கிடம் காந்தியடிகள் தன் அபிப்பிராயத்தை வாய்மொழியாகக் கூறியிருக்கலாம் அல்லது அவரைக் கொண்டு எழுதச் சொல்லியிருக்கலாம் என்று சிலரால் ஊகிக்கப்படுகிறது.

இது எங்ஙனமாயினும், பம்பாய்க் கிரானிகல் வெளியிட்ட கடிதத்தின் சாரமடங்கிய ஓர் தஸ்தாவேஜினை இரண்டு வாரங்களுக்கு முன்னர் அரசாங்கம் ஆராய்ந்து முடிவு செய்தது உண்மையா அல்லவா என்பதாகப் பம்பாய்க் கிரானிக்கல் பின்னரும் வினவுகிறது. பம்பாய்க் கிரானிக்கலில் மிஸ்டர் ஹார்னிமென் எழுதியுள்ள கட்டுரையில் "கிரானிக்கலில்" வெளியான கடிதத்தின் சில சொற்களும் பதங்களும் அங்கங்கே மாற்றப்பட்டிருக்கலாம் என்றும் பொதுவாகக் காந்தியடிகள் அரசாங்கத்திற்கு அறிவித்த அபிப்பிராயத்தின் சாரம் இதுதான் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இவை யாவற்றையும் ஒன்று சேர்த்துப் பார்க்குமிடத்து காந்தியடிகள் அரசாங்கத்திற்குக் கடிதம் எழுதாவிடினும் தன் அபிப்பிராயத்தை அரசாங்கம் அறியும்படி செய்துள்ளார் என்பது தெரியவருகிறது. இது மூன்றாவது மனிதர் வேண்டுகோளின்படி இருக்கலாம் என்றும் நம்பவேண்டியதிருக்கிறது. இதேகருத்துத்தான் "கிரானிக்கல்" வெளியிட்ட கடிதத்திலும் அடங்கியிருக்கிறது.



# சட்டமறுப்பு இயக்கம்.

### பெண் கைதிகள் விடுதலை.

கண்ணனூர் சிறையில் சட்டமறுப்பு சம்பந்தமாக ஒரு வருடத் தண்டனையனுபவித்து வந்த குடிவாடா லட்சுமிநரசிம்மம்மா முதலிய ஆறு பெண்மணிகள் ஏப்ரல் ௧௧-ம் தேதி கண்ணனூரிலிருந்து விடுதலை செய்யப்பட்டார்கள்.

ஃ ஃ ஃ

### கிராமங்களுக்கு ரூ. ௯௦௦ அபராதம்.

பாஞ்சாலத்திலுள்ள மர்தானைச் சார்ந்த சில கிராமங்களில் சிவப்புச் சட்டைக்காரர்கள் கூட்டங்கள் கூட்டியும் புரட்சிக் கோஷங்கள் புரிந்தும் சமாதான பங்கம் ஏற்படுத்தி வருவதால் அந்தக் கிராமவாசிகள் ரூ நூறு அபராதம் கொடுக்க வேண்டும் என்று பஞ்சாப் கவர்னர் தமது சபையினர் யோசனையின் மீது உத்திரவிட்டுள்ளார்.

ஃ ஃ ஃ

### ஸ்ரீமதி சரோஜனி விடுதலை.

ஸ்ரீமதி சரோஜனி தேவியார் ஏப்ரல்மீ ௬௨ காலை எர்வாடா பெண்கள் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார். பின்னர் காந்தியடிகளைப் பார்த்துப் பேசிய பொழுது ஓர் பூக்கூடை பரிசாகப் பெற்றாராம். சரோஜனியார் சாமான்களுள் ஓர் பெரிய சமையற்பானை இருந்ததாம். அது மிகவும் பெரிதாக விருந்ததால் அதற்கு "ஷவக்கத் அலி" என்ற பெயர் கொடுத்துள்ளாராம்.

ஃ ஃ ஃ

### அரசியல் விடுதலைக்காக உண்ணாவிரம்.

புனாவிலுள்ள பைசா பண்ட் ரானடே என்பவர் காந்தியடிகள் உட்பட்ட எல்லா அரசியல் கைதிகள் விடுதலைக்காகவும் அரசியல் நிலைமை சீர்படுவதற்காகவும், புனா நகரிலிருந்து அம்மை நோய் ஒழிவதற்காகவும் உண்ணாவிரதம் இருக்கின்றாராம். இவர் இரண்டு வருடங்களுக்கு முன்னர் புனாவில் அந்நிய ஜவுளி வியாபாரத்தைத் தடுக்கும் பொருட்டு உண்ணாவிரத மிருந்தார்.

---

### படேல் உடல் நிலை.

மாஜி இந்தியச் சட்டசபைத் தலைவரான கனம் வி. ஜே. படேல் அவர்கள் லண்டனில் ஹிருதய நோயால் மிகவும் வருந்துகிறாராம். அவரை வியன்னாவுக்குத் திரும்பவும் விரைவில் செல்லும்படி லண்டன் டாக்டர்கள் சிபார்சு செய்திருக்கிறார்களாம்.

* * *

### ஹரிஜனக் குழந்தைகளுக்கு இனம் கல்வி.

தஞ்சை ஜில்லா போர்டு ஆட்சிக்குட்பட்ட எல்லாப் பாடசாலைகளிலும் ஹரிஜன வகுப்புக் குழந்தைகள் அனைவரும் எவ்வித பீசும் இல்லாது கல்வி கற்பிக்க வேண்டுமென்று ஓர் தீர்மானம் கொண்டுவரப் போவதாக திரு. தியாகராஜ ஐயர் அறிவித்துள்ளார்.



# ஊழியன்.

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி
ஸ்ரீமுக-ஞூ சித்திரை-மீ எஉ

## ஸ்ரீ முக.

ஸ்ரீமுகஎன்னும் நற்பெயர் அமைந்த ஆண்டு இவ்வாரம் பிறந்திருக்கிறது. சென்ற வாரத்தோடு பழைய ஆங்கீரச ஆண்டு கழிந்தது. போன ஆங்கீரச ஆண்டில் உலகில் ஏற்பட்ட துன்பங்கள் பலப்பல. போன ஆண்டு உலகைப் பெரிதும் கலக்கிவிட்டது. உலகத்தைச் செழிக்கச் செய்வது பொருளாதாரமே. நடந்த ஆண்டின் பொருளாதார நிலை மிகவும் மோசமானது என்று சொல்ல வேண்டுவதில்லை. அதனை உலகிலுள்ள அனைவரும் அறிவர். உலகில் பெரும்பாலார் அதனை அநுபவித்தே யிருப்பான்றோ?

சென்ற ஆண்டில் உலகில் தோன்றிய பணப் பஞ்சம் இதற்குமுன் ஒரு போதும் ஏற்பட்டதில்லையெனப் பலராலும் சொல்லப்படுகிறது. அவ்வளவு கொடுமையான பணக் கஷ்டத்தை உலகுக்கு உண்டாக்கிய ஆங்கீரச ஆண்டு போய்விட்டது. அந்த ஆண்டோடு பணக் கஷ்டமும் போய்விட்டதா? இல்லை. ஆனாலும் அச்சிரமத்தைப் புதிய ஆண்டாகிய ஸ்ரீமுக போக்கி மக்கட்கெல்லாம் நலம் பயக்குமென்று நம்பிப் புத்துணர்வோடு கருமமாற்ற வேண்டுவது கடமையன்றோ?

ஸ்ரீமுக ஆண்டு சென்ற சில ஆண்டுகளாக மக்கட்குத் தோன்றிய இடுக்கண்களை யெல்லாம் போக்குவதாக! முக்கியமாக உலகத்தின் பொருள் முட்டை ஸ்ரீமுக நீக்குவதாக! ஸ்ரீமுக தன் பெயருக்கேற்ப—பழைய இந்தியாவின் நம்பிக்கைக்குப் பொருந்த செல்வத் திருமகள் திருவிழிப் பார்வையை நாடு முழுமையும் நிரப்புவதாக! ஸ்ரீமுக, என்ன துன்பம் நேர்ந்தாலும் என்னதான் பணக்கஷ்டம் ஏற்பட்டாலும் அவற்றை ஒரு புறத்தே வைத்துவிட்டுப் போட்டி பொறாமை பொருளில்லாமலும் வீண் செலவிடுவோர் போக்கைத் திருத்தி நன்னெறி உய்ப்பதாக!

ஸ்ரீமுக பணத்திமிர் கொண்டு சமயம் பார்த்துப் பிறரைக் கெடுக்கும் நயவஞ்சகர்கட்கு நற்புத்தி தருவதாக! ஸ்ரீமுக உலகிற் பிறந்த எல்லாருடையவும் நியாயமான பிறப்புரிமை கிட்ட அருள்புரிவதாக! ஸ்ரீமுக பேராசை கொண்டு பிறர்பொருள் வௌவ நினைப்போரையும், பிறநாடுகளை யெல்லாம் கட்டியாள வேண்டுமென்று கருதுவோரையும், மற்றையோரையெல்லாம் அடிமையாக்கித் தாங்கள் அதிகாரிகளாக இருக்க எண்ணுவோரையும் வீழ்த்தித் தொலைப்பதாக! ஸ்ரீமுக, பிறர்க்கெனவே தங்கள் சுக போகங்களைத் துறந்து பொதுநலன் நாடி இன்னல்களை யெல்லாம் விரும்பி வரவேற்றுக் கொண்ட பெரியார்கள் நற்கருத்தைப் பெரிதும் ஈடேற்றுவதாக!

சுருங்கக்கூறின் புதிய ஆண்டாகிய ஸ்ரீமுக ஆண்டு அறமனைத்தையும் வளர்ப்பதாக! மறம் முழுதையும் தேய்ப்பதாக! மக்களைப் பெரிதும் அல்லோல கல்லோலப்படுத்தி விட்டுப் போன ஆங்கீரச ஆண்டுக்குச் செலவு கூறிப் புதிய ஆண்டுக்கு வாழ்த்துரை வழங்குவோம். ஸ்ரீமுக வரவு நல்வரவாகுக!

## இடிமுழக்கம்.

கூட்டுக்கமிட்டி.

ஆங்கிலப் பார்லிமெண்டால் இந்தியாவின் எதிர்காலத் தலைவிதியை எழுதும் பிரமாக்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டார்கள். இவர்களுக்கு சில வகையில் பிரம்மனிலும் அதிகமான அதிகாரங்கள் கிடைத்திருப்பதாகத் தெரிகிறது. பிரம்மன் ஒரு மனிதனது முன்வினைக்குத் தக்கவாறு அவனது பின் வாழ்க்கையிருக்கும்படி தலையில் எழுதுவானாம். ஆனால் இந்தப் பிரமதேவர்கள் யாவற்றையும் தலைகீழாகப் புரட்டித் தங்களுக்கு விருப்பமான முறையில் இந்தியாவின் தலையெழுத்தை எழுதப்போகிறார்கள். இவர்கள் முன்னர் சாட்சி சொல்ல விரும்புவோர்கள் முன்னதாகவே தாங்கள் இன்னின்ன சொல்லப்போவதாகச் சுருக்கமாக எழுதியனுப்பவேண்டுமாம். இந்தச் சாட்சி தேவையா இல்லையா என்று முடிவு செய்ய வேண்டுவதும் அவர்கள்தாம். இப்பொழுது இருக்கும் கமிட்டித் தலைவர் பெரும்பாலும் எந்தக்கட்சியும் சேராதவரென்றே சொல்லலாம். முன்னர் விவசாயக் கமிஷனுக்கு இவர் தலைவராக விருந்தபொழுது சாட்சிகளிடம் மிகத் தந்திரமாக நடந்துமிருக்கிறார். ஆனால் இந்தியா சம்பந்தப்பட்டவளவில் இவர் தலைவராக விருப்பதும் இல்லாதிருப்பதும் ஒன்றுதான். இனி இதர அங்கத்தவருள்ளும் பெரும் பகுதியார் பிற்போக்குக் கட்சியாளராகவே இருக்கின்றார்கள் அதோடு சர்ச்சில் கோஷ்டியார் கமிட்டியின் வெளியே இருந்து கொண்டு இப்பொழுதே ஏக ஆர்ப்பாட்டங்கள்செய்யவும் தொடங்கிவிட்டார்கள். இந்தியாவுக்குச் சாதகமாக ஏதாவது எதிர்பார்ப்பதென்றால் அது தொழிற்கட்சியாரிடமிருந்து மட்டுமே யாகும். ஆனால் தற்பொழுதுள்ள நிலையில்—தொகையில்—அவர்கள் ஏதுவும் செய்வதற்கில்லை. ஆதலால் இக்கமிட்டியாரிடமிருந்து இந்தியா எவ்வித நன்மையும் எதிர்பார்க்க முடியுமென்று எண்ணுவதற்கில்லை. நன்மை வேண்டாம்; தீமையாவது விளையாதிருக்குமா என்பதே இப்பொழுது கவலைக்குரியதாக விருக்கிறது.

### இந்தியப் பிரதிநிதிகள் நிலை.

கூட்டுக் கமிட்டிக்கு இந்தியப் பிரதிநிதிகள் சிலரை அழைப்பதென்று முடிவு செய்திருக்கிறார்கள். ஆகலால் இந்தியாவின் தேவையை இவர்கள் நன்கு வலியுறுத்தி இந்தியாவிற்கும் அவசியமான அரசியலை ஏற்படுத்த கமிட்டியைத் தூண்டுவதற்குச் சாதகமாக விருக்கலாம் என்று உலக விவகாரம் நன்கு தெரியாத சிலர் சந்தேகிப்பார்கள். இந்தியப் பிரதிநிதிகளுக்கு அந்தக் கூட்டுக் கமிட்டியில் ஏதாவது உரிமை யிருக்கிறதா என்பதை ஆராய்ந்து பார்த்தால் இந்தச் சந்தேகத்திற்கு இடமே ஏற்படாது. அழைக்கப்படும் இந்தியர்கள் முதலாவதாக அச்சபையின் அங்கத்தவர்களேயல்ல. பார்லிமெண்டு சபையால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் அங்கத்தவர்களடங்கிய அக்கமிட்டியார் தங்கள் கூட்டத்தில் 'இந்தியப் பிரதிநிதிகள் வாலாம்; உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லலாம்' என்று கூறினால் மட்டுமே அக்கூட்டத்தினுள் நுழையும் உரிமையுண்டு. "நீங்கள் வெளியே போங்கள். நாங்கள் யாவும் யோசித்து முடிவு செய்துகொள்ளுகிறோம்" என்று கூறுவார்களாயின் பதில்பேசாது வெளியே செல்லவேண்டிய நிலையிலேயே இந்தியப் பிரதிநிதிகள் இருக்கின்றார்கள். அபிப்பிராயம் மாறுபட்ட காலங்களில் தங்கள் ஓட்டுகளைக் கொடுக்கவும் இவர்களுக்கு அதிகாரமில்லை. அறிக்கை தயார் செய்யும் பொழுதும் இவர்கள் அதில் கலந்துகொள்ளும் தகுதியற்றவர்களாகவேக் கருதப்படுவார்கள். அங்ஙனமாக, இப் பிரதிநிதிகள் இங்கிலாந்துக்கு செல்லுவதால் என்ன பயன் என்று நண்பர்கள் வினவலாம். அரசாங்கச்செலவில் இங்கிலாந்திற்குச் சுகமாக இந்தக் கோடை காலத்தில் போய்வரலாம். அங்கு நடைபெறும் விருந்துகளில் உண்டுகளிக்கலாம். இன்னும் பார்லிமெண்டு கூட்டுக் கமிட்டியாரிடையே உட்கார்ந்து அவர்கள் கூறுவனவற்றிற்கு 'ததாஸ்து' பாடிவரலாம். இவைதான் இந்தியப் பிரதிநிதிகள் இங்கிலாந்தில் சென்று சாதிக்கப்போகின்றவை!

### லோக குருவுக்கு அனுதாபம்!

"லோக குரு"க்களில் ஒருவராகிய பூரி சங்கராச்சாரிய சுவாமிகளுக்கு ஹரித்துவாரத்தில் ஏற்பட்ட பரிதாபநிலைக்கு நாம் மிகவும் அனுதாபம்கொள்கின்றோம். சநாதன தர்மத்தையே விழுந்துவிடாதபடி தாங்கிக்கொண்டிருக்கும் இப்பெரியார் அங்கு விஜயம் செய்த பொழுது எவருமே அவரை வரவேற்கவில்லையாம். ஆனால் பண்டித மாளவியாஜி வந்தபொழுது மிக ஆடம்பரமாக வரவேற்கப்பட்டாராம். அது தான் போகட்டும், அங்குநடைபெற்ற சநாதன மகாநாட்டிலாவது வந்திருப்பவர் பெரிய லோக குரு! சட்ட திட்டங்கள் யாவற்றிற்கும் அப்பாற்பட்டவர் என்பதைத் தலைவரும் பிரதிநிதிகளும் உணர்ந்தார்களா? அதுவுமில்லை. 'மகாநாட்டில் பேசுவதென்றால் தலைவர் அனுமதிபெற்றே பேசவேண்டும். இன்றேல், பேசாது உட்கார வேண்டும்' என்று சங்கராச்சாரிய சுவாமிகளுக்குத் தலைமை வகித்த மாளவியாஜியும் இதர அன்பர்களும் கூறினார்களாம். "ஜகத்குரு" 'எனக்கு உத்தரவு போடுவதற்கு எவருக்கும் உரிமையில்லை. சநாதன தர்மத்திற்கு நானே அதிபதி' என்ற முறையில் பேசினாராம். தான் எனும் அகந்தையை அடக்கப் பிறருக்கு உபதேசிக்கும் இப்பெரியார், அகங்காரங்கொண்டு பேசியதால் சபையோரால் எள்ளி நகையாடப்பட்டார் என்பதை அறிய விசனப்படாதிருக்க முடியாது. சுவாமிகள் இனியேனும் இத்தகைய நிலைமையில் மாட்டிக்கொள்ளாதிருக்க வேண்டுகிறோம்.

## உள்ளூர்.

| | |
|---|---|
| செய்கோன் வட்டம் | உ-0-0 |
| சிங்கப்பூர் | ச-அ-0 |
| பினங்கு | ச-அ-0 |
| கொழும்பு | 0-அ-0 |
| சென்னை | ௧-உ-0 |
| சென்னை (பங்குனி) நடப்புவட்டி | ௧-௯-௯ |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | ௯-௧-0 |
| ரங்கூன் (பங்குனி) நடப்புவட்டி | 0-௯-௯ |
| பவுன் | ௧௯-௯-௯ |
| வெள்ளி ரூபாயிடை | 0-௯-0 |

### ஓர் தற் கொலை.

இவ்வூர் நா. புதூரில் திரு மெய்யப்பா செட்டியார் என்பவர் தனது குடும்பத்தில் சேர்ந்த ஏதோ கலகம் காரணமாக சென்ற திங்கட்கிழமை இரவு தனது வீட்டுக் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டதாகச் சொல்லப் படுகிறது.

### ஹைஸ்கூல் மாணவர் சங்க விழா

காரைக்குடி ஸ்ரீ மீனாட்சி சுந்தர வித்தியா சாலை மாணவர் சங்கத்தின் ஆண்டு விழா சென்ற செவ்வாய்க்கிழமை மாலை தேவகோட்டை சப் கலெக்டர் திரு லஸ்ராடோ ஐ. சி. எஸ் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அத்தருணம் பாடசாலை மாணவர்களின் தமிழ், வடமொழி, ஆங்கிலம் முதலிய மொழிகளில் பாட்டு, பேச்சு நடிப்பு முதலியன நடைபெற்றன. பின்னர் திருச்சித் தேசியக் கல்லூரியின் போதகாசிரியர் திருவாளர் வரதாச்சாரியாரவர்கள் "மாணவரும் எதிர்காலமும்" எனும் பொருள் பற்றி ஓர் விரிவுரை நிகழ்த்தினார். தலைவர் முடிவுரை யோடும் வந்தன வழித்துடனும் கூட்டம் முடிவெய்தியது.

## கப்பல்.

நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டிற்குச் செல்லும்

கப்பல்களும் அவை புறப்படும் தேதிகளும்.

| கப்பல் | புறப்படும் தேதி |
|---|---|
| ரஜுலா | உக-௪-௩௩ |
| ரோணா | ௨௯-௫-௩௩ |
| ரஜுலா | உஎ-௫-௩௩ |

சிங்கப்பூர், பினங்கு முதலிய இடங்களிலிருந்து நாகபட்டினம் வரும் கப்பல்கள்.

| | |
|---|---|
| ரஜுலா | ௧௯-௪-௩௩ |
| ரோணா | ௯-௫-௩௩ |
| ரஜுலா | ௧எ-௫-௩௩ |

### தனவைசிய இளைஞர் உடற்பயிற்சி மகா நாடு.

நன்கொடை வரவு.

லக்ஷிமிபுரம் ஸ்ரீமான் ந. சொ. அரு. அருணாசலம் செட்டியாரவர்களால், பர்மாவிலிருந்து அனுப்பிய வெள்ளிக்கிண்ணம் ஒன்று வரப்பெற்றோம் என்று உபகாரிய தரிசி சு. கரு. சு. இராமஸ்வாமி செட்டியார் எழுதுகிறார்.

### ஸ்ரீமதி முகந்த மாளவியா.

பண்டித மாளவியாவின் மகன் முகுந்த மாளவியாவின்மனைவி லெட்சுமணபுரிசிறையிலிருந்து ஏப்ரல் ௯௩-ம் தேதி விடுதலை செய்யப்பட்டார்.

### சுயமரியாதைக்காரர்களுக்குத் தண்டனை.

நீடாமங்கலத்தில் திரு. சே. ராமையா, திரு. சொக்கலிங்கம் எனும் இரண்டு சுயமரியாதைக்காரர்கள்மீது டவுன் நியூசன்ஸ் சட்டப்படி வழக்குத் தொடரப்பட்டதில் நீடாமங்கலம் சப்மஜிஸ்திரேட்டால் மூன்று நாள் காவல் தண்டனை விதிக்கப்பட்டது.



## தந்தி.

சிங்கப்பூர் சித்திரைமீ ௯௨

உண்டியல் நூற்று ஐம்பத்து எட்டே அரைக்கால்
ஈயம் எண்பத்தொன்றேமுக்கால்
ரப்பர் ஒன்பதே கால் அரைக்கால்

ரேங்கூன் சித்திரைமீ ௯௨

| | |
|---|---|
| பவுன் | ௧அ-௯-0 |
| தவணை வட்டி | 0-எ-0 |
| படகு நெல் | ௯௯ |
| ரயில் நெல் | ௯௯ |
| பெரிய மில் ஸ்பெஷல் அரிசி | ௧௪எ-அ-0 |
| நசேன் சிறியமில் ,, | ௧௯௨-அ-0 |
| டை எக்ஸிஷூ ,, | ௧௯எ-அ-0 |
| மீடன் பஸார் ,, | ௧௯0 |
| செடி அரிசி மார்க்கட் சுகர்தி | உ00, உ௨0 |
| டை கிளாய் | ௧அ௯, ௧௯0 |
| மில்சார் | ௧௯௯ |
| யாதலே | உ00 |

### முனிசிபல் திருத்தச்சட்டம்.

சென்னை மாகாணத்திலுள்ள ௯0 பெரிய முனிசிப்பாலிட்டிகளில் நிர்வாக வேலைகளைக் கவனிக்க கமிஷனர்களை நியமிப்பதென்றுள்ள ஜில்லா முனிசிபல் சட்டத்திற்கு வைசிராய் அங்கீகாரம் கிடைத்து விட்டது. ஆதலால், அச்சட்டம் ஏப்ரல் மாதக் கடைசிக்குள்ளே அமுலுக்கு வந்துவிடுமென்றும் கமிஷனர்களாக நியமிக்கத் தகுந்த டெப்டி கலெக்டர்களையும் தசில்தார்களையும் சிபார்சு செய்யும்படி ரிவின்யு போர்டாரிடம் அரசாங்கம் கேட்டிருப்பதாகவும் தெரிகிறது.

### திரு வள்ளியப்ப செட்டியார் மீது மோசடி வழக்கு

ரங்கூன் சா. அ. ராம. கடை முறிந்து போன விஷயம் நண்பர்கள் அறிவார்கள். அக்கடையின மாந்தலே கிளைக்கடைஏஜண்டு திரு வள்ளியப்ப செட்டியார் மார்ச்சு ௯௯-ம் தேதி மாந்தலே வின்சட் கம்பெனி மானேஜர் யக்சவுங் கட்டிடம் சென்று ரூ ௯௯00 கடன் வாங்கியதாகவும் அத்தொகை நடப்புக் கணக்கில் டிபாசிட்டாகக் கொடுக்கப் பெற்றதாகவும் பின்னர் கடை முறிந்து போன செய்தி கேட்டபின் தன் பணத்தைத் திரும்பக் கொடுக்கும்படியாக வினவிய போது திரு செட்டியார் கொடுக்க முடியாத நிலைமையில் இருந்தார் என்றும் எனவே அவர் மீது நம்பிக்கைத் துரோகம் செய்ததாக ஓர் வழக்குத் தொடரப் பட்டதாகவும் சொல்லப் படுகிறது; இந்தக் கேஸ் சம்பந்தமாக அவர் ரூ உ000 ஜாமீன் கொடுத்ததால் கைது செய்யப்படவில்லை என்றும் சொல்லப் படுகிறது.

### "நீதி வழங்காவிடின் மீண்டும் பட்டினி கிடப்பேன்."

ஆமதாபாத் ஆதி இந்துத் தலைவர்களான கோபாயும், அதாபாயும் எரவாடா சிறைக்குச் சென்று மகாத்மா காந்தியைக் கண்டு பேசி பின்வருமாறு விண்ணப்பித்துக் கொண்டனர்;—'(ஆதி இந்துக்களாகிய) எங்களுக்காக தாங்கள் பட்டினி கிடந்து உடல் நீத்தல் கூடாதென்பதே எங்கள் வேண்டுகோள். அப்படி நீங்கள் பட்டினி கிடக்க ஆரம்பிப்பது எங்களுக்கு மிக்க அவமதிப்பை உண்டுபண்ணுவதாகவிருக்கிறது."

உலகத்தின் எல்லா பாகங்களிலிருந்தும் ஏராளமான கடிதங்கள் வந்து குவிந்துள்ளன. மகாத்மா அவைகளைப் படித்த வண்ணமாக விருந்தார். அப்போது, மகாத்மா புன் சிரிப்புடன் பதில் கூறியதாவது:—உங்களுக்கு இந்து சமூகம் நீதி வழங்காவிட்டால் நான் திரும்பவும் பட்டினி கிடப்பேன். கல்வித் துறையில் நீங்கள் பிற்போக்கானவர்களாக விருப்பதால் சர்க்கார் பாடசாலைகள் உள்பட உங்களை அனுமதிக்கும் எந்த பாடசாலையையும் நீங்கள் உபயோகித்துக் கொள்ளலாம்."

பல விஷயங்களைப் பற்றி நீண்ட நேரம் விவாதம் நடந்த பிறகு மகாத்மா முடிவுரையாகக் கூறியதாவது:—"தீண்டாமை விரைவாக மறைந்து வருகிறது. கொஞ்ச காலத்தில் அது முற்றிலும் இல்லாமற் போய் விடும்."

## கூட்டுக் கமிட்டி.

### பிரதிநிதிகள் தேர்தல்.

பார்லிமெண்டு கூட்டுக் கமிட்டிக்கு காமன்ஸ் சபையிலிருந்தும் லார்டு சபையிலிருந்தும் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்டுள்ள மெம்பர்கள் பெயர் சென்ற வார ஊழியனில் வெளியிடப்பட்டிருக்கிறது. அதனை அங்கீகரிக்கும் தீர்மானம் ஏப்ரல் ௯0௨ காமன்ஸ் சபையில் விவாதத்திற்கு வந்தது. அப்பொழுது தொழிற்கட்சியினருக்குப் போதுமான பிரதிநிதித்துவமில்லை என்றும் அரசாங்கச் சார்பான பிரதிநிதிகள் தொகை அதிகமென்றும் தொழிற்கட்சியாராலும், சர் சர் வேட்டிவ் கட்சியின் சர்ச்சில் கோஷ்டியாராலும் ஆட்சேபிக்கப்பட்டது. திரு ருருக் ஷாங்க் என்பவர் காமன்ஸபை பிரதிநிதிகள் ௯௨-தான் இருக்க வேண்டுமென்று ஓர்திருத்தம் கொண்டு வந்தார். அது வழக்கப்படி தோற்றுப்போயிற்று. கடைசியில் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### கமிட்டியின் 'கோரம்'

பார்லிமெண்டு கூட்டுக்கமிட்டியின் கோரம் எட்டாக விருக்கவேண்டுமென்று மிஸ்டர் சர்ச்சில் கொண்டுவந்த திருத்தம இந்திய மந்திரி சர் ஹோர் ஒப்புக்கொண்டதால் அவ்வாறே தீர்மானிக்கப்பட்டது.

### இந்தியப்பிரதிநிதிகள் மெம்பர்களல்ல.

கூட்டுக் கமிட்டிக்கு இந்தியப் பிரதிநிதிகள் பலர் அழைக்கப்பட்டுள்ளார். இவர்கள் நிலைமை என்னவாகவிருக்கும் என்று பார்லிமெண்டில் ஓர் கேள்வி கேட்கப்பட்டது. அதற்கு இந்திய மந்திரி கூறிய பதிலால் இந்தியப் பிரதிநிதிகள் மெம்பர்களாகப் பாவிக்கப்பட மாட்டார்களென்றும் இவர்களுக்குக் கமிட்டி அபிப்பிராயத்தில் ஓட்டுரிமையும் கிடையாதென்றும் அவர்கள் வெறும் யோசனைகள் செல்லுவதற்காக மட்டுமே அழைக்கப்படுகிறார்களென்றும் தெரியவருகிறது. இம்மட்டோ? கமிட்டியார் அறிக்கை தயார் செய்யும் பொழுதும் இவர்கள் கலந்து கொள்ளக்கூடாது. இந்தியர்களை, பார்லிமெண்டு பிரதிநிதிகள் 'வா' வென்றால் போய் உட்காரவேண்டும். 'போ' வென்றால் பேசாமல் எழுந்திருந்து வெளியே செல்லவேண்டும். இதுதான் நமது பிரதிநிதிகள் என்று சொல்லிக்கொண்டு பார்லிமெண்டு கூட்டுக்கமிட்டிக்குப் போகவிருக்கும் இந்தியர்களுக்குக் கிடைக்கவிருக்கும் கவுரவம்!

### தலைவர் தேர்தல்.

ஜாயிண்ட் கூட்டுக் கமிட்டியின் முதற் கூட்டம் ஏப்ரல் ௯௨-ம்டி லார்டு சபையில் நடைபெற்றது. அத்தருணம் லார்டு லின்லித்கோ தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

### கமிட்டியின் அதிகாரம்.

கமிட்டிக்கு வெள்ளைக் காகித அறிக்கையின் சிபார்சை ஒப்புக்கொள்ளவோ அடியோடு மறுக்கவோ உரிமை யுண்டு. இந்தியப் பிரதிநிதிகளைக் கலந்து கொள்ளுவதும் அவர்கள் அபிப்பிராயத்தை மறுப்பதும் கமிட்டியையே பொறுத் திருக்கிறது. இந்தியப் பிரதிநிதிகளை அழைக்கும் உரிமையும் அவர்களையேச் சார்ந்தது.

### சாட்சிகள் விசாரணை

கூட்டுக் கமிட்டியார் முன்னர் சாட்சியங் கூற விரும்பும் இந்தியர்கள் தங்கள் விண்ணப்பத்தை லண்டன் லார்டு சபையிலிருக்கும் ஜாயிண்டு பார்லமெண்டு கமிட்டிக் குமஸ்தாவிற்குத் தந்தி மூலம் ஏப்ரல் ௨எ-ம் தேதிக்குள் அனுப்பித்து அந்த விஷயத்தை இந்திய அரசாங்கத்திற்கும் அறிவித்தல் வேண்டும். பின்னர் அதனை உறுதி செய்து அனுப்பும் விண்ணப்பத்தை தபாலிலோ அல்லது ஆகாயத் தபாலிலோ அனுப்பித்து தாங்கள் சாட்சியம் சொல்ல விரும்பும் விஷயத்தின் சுருக்கத்தையும் குறிப்பிடுதல் வேண்டும். இவர்களுள் தங்களுக்குத் தேவையானவர் சாட்சியத்தை நேரில்வந்து கூறும்படி பின்னர் அறிவிக்கப்படுமாம். எப்பொழுது அவர்கள் சாட்சியம் தேவை என்பதையும் எத்தனை பேர் சாட்சியம் தேவை என்பதையும் கமிட்டியாரே முடிவு செய்து ஏப்ரல் உஎக்குப் பின்னர் கூடிய விரைவில் தெரிவிப்பார்களாம்.

## சுயமரியாதைமகாநாடு

### மதுரையில் கூட்டம்.

மதுரைஜில்லா முதலாவது சுயமரியாதை மகாநாடு ௯௯-௪-௩௩ காலை கமணிக்கு மதுரை விக்டோரியா பப்ளிக் ஹாலில் சென்னை தோழர், புரோபசர் பி. லெக்ஷிமிநாசு பி. ஏ. அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

மதுரை தோழர் எஸ். தியாகராஜன் அவர்கள் வரவேற்புத் தலைமை யுரையை வாசித்தார். மகாநாட்டுத் தலைவர் தமது பிரசங்கத்தை ஆங்கிலத்தில் வாசித்தார். அதை தோழர் முகம்மது சுல்தான் அவர்கள் (பாரிஸ்டர்) தமிழில் மொழிபெயர்த்துக் கூறினார். பகல் உணவிற்குப் பின்னர் விஷயாலோசனைக் கூட்டம் நடைபெற்றது. பிற்பகல் ௯-மணிக்கு மீண்டும் மகாநாடு ஆரம்பமாயிற்று. தோழர் நா. பி. காளியப்பன் அவர்கள் சமதர்ம கீதங்கள் பாடினார்.

மகாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தீர்மானங்களை பிரரேபித்தும் ஆமோதித்தும், தோழர்கள் ஈ. வெ. இராமசாமி, ரெங்கசாமி, ப. சிவானந்தன், சிவகுருநாதன், முகம்மது சுல்தான் (பாரிஸ்டர்) நா. பி. காளியப்பன், அ. பொன்னம்பலம், டபிள்யூ. பி. ஏ. சௌந்திர பாண்டியம், சாம். எஸ். சி. வி. வி. இராமசாமி (விருதுநகர் முனிசிபல்சேர்மன்) சம்பந்தம், ஆகியவர்கள் பேசினார்கள்.

காரைக்குடி முத்துப்பட்டணம் தோழர் ராம. சுப்பையா விசாலாட்சி அவர்கள் "பெண்கள் நிலை" என்பதுபற்றிப் பேசினார்கள்.

மதுரை சுயமரியாதைச் சங்கத்தின் வருடாந்திர அறிக்கையை காரியதரிசி தோழர் பி. எஸ். வேங்கடசாமி அவர்கள் வாசித்தார்கள். தலைவர் முடிவுரை கூற வந்த ஞேப சாரத்துடன் மகாநாடு இனிது முடிவடைந்தது. மகாநாட்டிற்கு பல வெளியூர்களிலுமிருந்து பிரதிநிதிகள் விஜயம் செய்திருந்தார்கள். மகாநாட்டிற்கு ஆண்களும் பெண்களும் சுமார் ௯00 பேருக்கு மேல் விஜயம் செய்திருந்தார்கள்.

தோழர் ஈ. வெ. இராமசாமி அவர்கள் ௧எ-௪-௩௩ காலை அருப்புக்கோட்டை சென்றனர்

### ஈ. வெ. ராவிற்கு வரவேற்பு.

மதுரை ஜில்லா முதலாவது சுயமரியாதை மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்த தோழர் ஈ. வெ. இராமசாமி அவர்கட்கு மதுரை சுயமரியாதைச் சங்கத்தார் ௯௯-௪-௩௩ பகல் ௯-மணிக்கு மதுரை பேரடி பங்களாவில் மதுரை பாரிஸ்டர் தோழர் முகம்மது சுல்தான் அவர்கள் தலைமையில் ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்துக்கொடுத்தார்கள்.

தோழர் ஈ. வெ. இராமசாமி அவர்கள் வரவேற்புப் பத்திரத்திற்குத் தக்க பதில் கூறினர்.

பின்னர் காரைக்குடி முத்துப்பட்டணம் தோழர் ராம சுப்பையா விசாலாட்சி அவர்கள் 'வாலிபர் கடமை' என்பதுபற்றி பேசினார்கள். தோழர் அ. பொன்னம்பலம் அவர்கள் 'சமதர்ம வேலைத்திட்டம்' என்பது பற்றிப் பேசினர். தலைவர் முடிவுரைக்குப் பின்னர் கூட்டம் இனிது முடிவடைந்தது.

### சுற்றுப்பிரயாணம்.

தோழர்கள் ஈ. வெ. இராமசாமி, ப. சிவானந்தம், முத்துச்சாமி வல்லத்தரசு, ராம. சுப்பையா, ராம. பெரிச்சியப்பா, அழகப்பா அண்ணாமலை, அ. பொன்னம்பலம் முதலியவர்கள் அ௯-௪-௩௩-ல் காலையில் நடைபெற்ற மகாநாட்டிற்குச் சென்றுவிட்டு ௯0-௪-௩௩ல் நீடாமங்கலத்திலும், ௧௧-௪-௩௩ மன்னார்குடியிலும், ௧௨-௪-௩௩-ல் தஞ்சையிலும், திருத்துறைப் பூண்டியிலும் சுற்றுப் பிரயாணம் செய்து சமதர்மப் பிரசாரம் செய்தார்கள். (ஒரு நிருபர்)

### ஆலயப் பிரவேசத்திற்கு தடை!

ஹரித்துவாரத்தில் நடைபெற்ற அர்த்த கும்ப மேளக் கொண்டாட்டத்தில் ஆலயப் பிரவேச சம்பந்தமாக எவரும் பேசக்கூடாதென்று கி. பு. கோ. கசச வது பிரிவின்படி ஓர் தடை உத்திரவு போடப்பட்டிருந்தது.

## செய்திகள்.

### மகாத்மா—லட்சுமி சந்திப்பு.

மகாத்மா காந்தியடிகள் ஹரிஜன வகுப்பைச் சார்ந்த லட்சுமி எனும் ஓர் சிறுமியை வளர்த்துவந்ததை நண்பர்கள் அறிவார்கள். அந்தப் பெண்மணி இரண்டு வருடங்களுக்கு முன்னர் திரு. மாதுதாஸ் சர்மா என்பவரை விவாகம் செய்வதாக உறுதிகொண்டிருந்தார். அதன்படி அவர்கள் இருவருக்கும் சமீபத்தில் சபர்மதி ஆசிரமத்தில் திருமணம் நடைபெற்றது. மணம் முடிவு பெற்றபின் முதன்முதலாகத் தம்பதிகள் இருவரும் ஏப்ரல் ௯௯-ம் தேதி ஏர்வாடாச் சிறையில் காந்தியடிகளைச் சென்று தரிசித்து அவரது ஆசீர்வாதத்தைப் பெற்றார்கள்.

### ரயில் வண்டிகளுக்குப் புதிய பெயர்.

தென் இந்திய ரயில்வேயில், கீழ்கண்ட வண்டிகளின் பெயர் ஏப்ரல் முதல் தேதியிலிருந்து மாற்றப்பட்டுள்ளது.

"இந்தோ சிலோன் மெயில்" "இந்தோ சிலோன் எக்ஸ்பிரஸ்" என்றும் "சவுத் ஈஸ்ட் மெயில்" என்பது "தூத்துக்குடி எக்ஸ்பிரஸ்" என்றும் "தனுஷ்கோடி எக்ஸ்பிரஸ்" "தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர்" என்றும், "சவுத் வெஸ்ட் மெயில்" 'சவுத் வெஸ்ட் எக்ஸ்பிரஸ் என்றும் அழைக்கப்பட்டு வருகிறது.

### இங்கிலாந்து-கராச்சி ௯0 மணிப் பிரயாணம்.

காப்டன் ரோலாசன், மிஸ்டர் நாஷ், என்பவர் உதவியால் இங்கிலாந்திலிருந்து கராச்சிக்கு இரண்டரை நாளில் ஆகாய விமானம் வழியாகப் பறந்துவர நிச்சயித்திருக்கின்றாராம். இந்தப் பிரயாணமானது ௯0 மணி நேரத்தில் இங்கிலாந்திலிருந்து கராச்சிக்கு வரமுடியும் என்று காட்டுவதற்காக மட்டுமல்ல; இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்குத் தபால், சாமான்கள், பிரயாணிகள் ஆகியவர்களையும் கொண்டுவர முடியும் என்பதை நிலைநாட்டுவதற்கே என்று மிஸ்டர் நாஷ் கூறினாராம்.

### கிட்டப்பா உடல் நிலை.

பிரபல நடிகர் திரு எஸ். ஜி. கிட்டப்பா உடல்நிலை பற்றி அவர் தமையனார் வெளியிட்டுள்ள அறிக்கை வருமாறு:—

சென்றவாரம் சென்னை டாக்டர் பி. ராமாராவ் எக்ஸ்ரே எடுத்துப் பார்த்ததில் ஸ்ரீ எஸ்.ஜி கிட்டப்பா ஈரல் வீக்கத்தினால் அவஸ்தைப் படுவதாகத் தெரிய வந்தது. அதன் பேரில் சென்ற நான்கு தினங்களாக டாக்டர் ராமாராவின் ரேடியோ லாஜிகல் இன்ஸ்டிட்யூட்டில் எலெக்டிரிக் சிகிச்சையில் இருந்து வருகிறார். டாக்டரின் யோசனையின்படி திரு எஸ். ஜி. கிட்டப்பா சென்னையில் இரண்டு மாதகாலம் இருந்து சிகிச்சை செய்து கொள்வார். அவருக்கு பசி என்பது கிடையாது. மிக்க இளைத்திருக்கிறார். எனினும், அவரது தேக நிலைமை கவலைக் கிடமானதாக விருக்கவில்லை.

### சநாதன தர்ம மகாநாடு.

ஹரித்துவாரத்தில் பண்டித மாளவியா அவர்கள் தலைமையில் சநாதன தர்ம மகாநாடு ஏப்ரல் ௯௨-ம் தேதி நடைபெற்றது. ஏராளமான ஜனங்கள் வந்திருந்தார்கள். அப்பொழுது பூரி சங்கராச்சாரிய சுவாமி அங்கு வந்து சேர்ந்தார். ஆலயப் பிரவேச விஷயமாகவும் தீண்டாமை விலக்கு சம்பந்தமாகவும் தம்மோடு விவாதிக்க வேண்டுமாய்க் குறிப்பிட்ட சில பண்டிதர்களிடையே விவாதிப்பது நல்லதென்று மாளவியாஜி கூறினாராம். ஆனால் மகாநாட்டிலேயே பேச விரும்புவதாக சங்கராச்சாரியார் அறிவித்து மகாநாட்டிற்குச் சென்று பேச ஆரம்பித்தாராம். மாளவியாஜி தாம் மகாநாட்டுத் தலைவர் என்றும் தன் அனுமதியின்றி பேசத் தொடங்கியது தவறு என்றும் கூறி பின்னர் பேசுவதற்கு உரிமையளித்தாராம். பிறகு சங்கராச்சாரியார் பேசுகையில் தனக்கு எவரும் உரிமையளிக்க வேண்டுவதில்லை என்றும் சநாதன தர்மத்திற்கே தாம் தலைவரென்றும் அவ்வாறு இருந்தும் தனக்குத் தக்க மரியாதை அளிக்கவில்லை என்றும் கூறினாராம். இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்பொழுது குழப்பம் ஏற்பட்டது. மாளவியாஜி கோஷ்டியார் 'மாளவியாஜி'க்கு ஜே! என்றும் சங்கராச்சாரியரைச் சார்ந்தவர் "ஜகத்குருவுக்கு ஜே" என்றும் கோஷித்தார்களாம். கடைசியில்கூட்டம் குழப்பத்தில் முடிவுற்றது.

# ஒத்துழைப்பின் தேவை.

## ‘காந்தியின்றி அரசியலெதுவும் நிலைத்திராது.’

### திரு. எம். ராமச்சந்திர ராவ் விரிவுரை.

கல்கத்தாவில் நடைபெற்ற அகில இந்திய மிதவாதிகள் மகாநாட்டில் தலைமை வகித்த திரு. ராமச்சந்திர ராவ் நிகழ்த்திய தலைமையுரையின் முக்கியப் பகுதி வருமாறு:—

#### அரசியல் நிலைமை.

அரசியல் நிலைமை அதிகக் கவலைக்கிடங்கொடுக்கக் கூடியதாக இருக்கிறது. மகா யுத்தத்திற்குப் பிறகு உலகின் அரசியல் போக்கில் ஏற்பட்ட புதிய உணர்ச்சியினாலும், மாண்டேகு—செம்ஸ் போர்டு சீர்திருத்தத்தினாலும் இந்திய தேசிய இயக்கம் வலுவடைந்து, இப்பொழுது உலகப் பிரச்சினையாகியிருக்கிறது. லார்டு இர்வின் காலத்தில் அது அதிக ஆக்கம் பெற்றது. அவராலும் மகாத்மா காந்தியாலும் உலகின் கவனம் இந்தியாவின் மீது திரும்பியது. அவர்கள் இருவரும் சமீப ராஜ்ய சரித்திரத்தில் அதிக முக்கிய ஸ்தானங்களை வகித்திருக்கிறார்கள். லார்டு இர்வின் காலத்தில் தான் இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் முள்ள சம்பந்தத்தில் விசேஷ மாறுதலேற்பட்டது. இதன் பலனாக சர்வகட்சி மகாநாடு கூட்டுவிக்கப் பட்டது; காந்தி— இர்வின் உடன்படிக்கை ஏற்பட்டது. இந்தியர்களுடைய சம்மதத்தின் பேரில்தான் இந்தியா ஏகாதிபத்யத்திற்குள்ளிருந்து வரும்படி செய்யக் கூடுமென்பது அந்த உடன்படிக்கை மூலமாக ஒப்புக் கொள்ளப்பட்டது. மகாத்மா காந்தி இரண்டாவது சர்வகட்சி மகாநாடடிலிருந்து திரும்பி வந்ததும் அவரைக் கைது செய்து பாதுகாப்பில் வைத்து விட்டது மகத்தான அரசியல் தவறாகும். வெளிப் படையாக அமைதி ஏற்பட்டிருப்பதில் ஸர் ஸாமுவெல் ஹோரும் லார்டு வில்லிங்டனும் பரம திருப்தி யடைகிறார்கள். ஆனால் அதிருப்தி உள்ளுக்குள் புகைந்து கொண்டிருக்கிறது.

#### காந்தி ஒத்துழைப் பின்றி எந்த அரசியலும் நடை பெறாது.

மகாத்மா காந்தியே இப்பொழுதும் பிரதான புருஷராக விளங்கி வருகிறார். அவருடைய அங்கீகார மன்னியில் ஏற்படுத்தப்படும் எவ்வித அரசியலும் நிலைத்திருக்க முடியாது. நமக்கும் அவருக்கும் முறைகளிலும் மனப்போக்கிலும் வித்தியாசமிருந்த போதிலும் இந்தியாவின் சுயேச்சைக்காகவே அவர் போராடுகிறார். அதில் இந்தியர்களில் எவரும் அநுதாப மில்லாதவராக இருப்பதற்கில்லை. “அவருடைய வழியைப் பின் பற்றுகிறவர்கள் குற்ற பரம்பரையினரன்று. கிரேட் பிரிட்டனிடத்திலாவது பிரிட்டிஷ் ஸ்தாபனங்களிடத்திலாவது பகைமையுடையவர்களுமன்று. அவர்கள் கண்ணியம் வாய்ந்தவர்கள். அவரவர்களுடைய துறைகளில் பிரக்கியாதி யடைந்தவர்கள். அவர்கள் சம்மதிக்கும் ராஜீய குறையினாலேயே அவர்கள் தங்களுடைய வழியினில் சென்று வருகிறார்கள். அந்தக் குறையை அகற்றி விட்டால் அவர்கள் நம்முடன் வேலை செய்வார்கள்” என்று ஸ்ரீ நிவாஸ சாஸ்திரியார் ஒரு சமயத்தில் சொல்லியிருக்கிறார். இதை ஞாபகத்திலிருத்தி யிருந்தால் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் பிரதிநிதிகளாக இங்கு இருந்து வருகிறவர்கள் இப்போதைய நிலைமையை ஏற்படுத்தி யிருக்க மாட்டார்கள். அவசரச் சட்ட ஆட்சியும் மகாத்மா காந்தியும் அவரைப் பின்பற்றுவோரும் சரணாகதி யடைய வேண்டுமென்று சொல்லுவதும் இர்வின் கொள்கைக்கு விரோதமானவைகளாகும். போராட்டம் ஒரு முடிவில்லாமற் போவதில் திருப்தி யில்லை யென்று ஸர் ஸாமுவேல்ஹோர் சொல்லியதிலிருந்து பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் கொள்கை யென்னவென்பது வெளிப்படுகிறது. இது மாறுதலடையும் வரை கவர்ன்மெண்டுக்கும் ஜனங்களுக்குமிடையே நல்லுணர்ச்சி ஏற்படப் போவதில்லை, தலைவர்கள் வேண்டிக் கொண்டும் கவர்ன்மெண்டார் பிடிவாதமாக இருந்து வருவது நிலைமை அதிக் கஷ்டமானதாகும்படி செய்திருக்கிறது.

#### அடக்கு முறையும் அவசரச் சட்டங்களும்.

இங்கிலாந்தில் தேசிய கவர்ன்மெண்டு ஏற்பட்டதே கவர்ன்மெண்டின் கொள்கையில் மாறுதல் ஏற்பட்டதற்குக் காரணமென்பதை அவர் விளக்கி விட்டு மேலே பேசியதாவது:—“இந்தியாவை ஆளுங்கள் அல்லது வெளியேறிவிடுங்கள்” என்ற கொள்கை யுடையவர்களே இப்பொழுது பார்லிமெண்டில் அதிகமாக இருக்கிறார்கள், கவர்ன்மெண்டின் இந்தியக் கொள்கைக்கு அவர்களுடைய நிர்ப்பந்தமே முக்கியக் காரணம். சமரஸமாக ஓர் முடிவுக்கு வர வேண்டுமென்ற உணர்ச்சியைக் காணோம். “பலோராஜா பிருதிவிபதே” யென்ற உணர்ச்சி ஓங்கியிருக்கிறது. கவர்ன்மெண்டின் மீதும் இதன் முழுப்பொறுப்பையும் சுமத்தி விடுவதற்கில்லை. நெருக்கடி ஏற்படும்படி இருவரும் செய்து விட்டார்கள். உடன்படிக்கைக்குப் பிறகும் இருசாராரும் யுத்த மனோபாவத்தைவிட வில்லை. அரசாங்கம் சட்டமறுப்பு மறுபடியும் தலைக்கிளம்பின் அதைச் சமாளிப்பதற்கு முன் ஜாக்கிரதைகள் செய்திருந்தனர்; சில மாகாணங்களில் நடந்த காரியங்கள் காங்கிரஸ் வாதிகளுக்கே கலகத்தை உண்டு பண்ணக் கூடியவைகளாக இருந்தன. மகாத்மாவுக்குப் பேட்டி கொடுக்க ராஜப் பிரதிநிதி சம்மதித்திருந்தால் சென்ற சுடு மாதகாலச் சரித்திரப் போக்கே வேறாக இருந்திருக்கும். இவ்விருவராலும் இந்த நிலைமை ஏற்பட்டு விட்டது வருந்தத்தக்க விஷயம். உண்மை நிலையை உணரும் வரை அரசியல் வானம் வெளுக்கப் போவதில்லை. அரசியல் அறிக்கையைப் பரிசிலனை செய்வதற்குச் சவுகரியமான நிலைமையை ஏற்படுத்த அரசாங்கத்தார் தவறி விட்டனர். எல்லாக் கட்சியினருடைய சம்மதத்தைப் பெற்ற அரசியலை ஏற்படுத்துவதாகச் சொல்லி விட்டுப் பலருடைய அபிப்பிராயத்தை யறியாமலே அதை இயற்றி வைக்க முன் வந்திருப்பது அதிசயமாக இருக்கிறது. எதிர்கால அரசியல் திருப்திகரமாக அமுல் நடைபெற வேண்டுமானால் இருசாராருடைய ஒத்துழைப்பும் வேண்டும். ஆனால் அதைக் கவனியாமலே இப்பொழுது கவர்ன்மெண்டார் முடிவு செய்ய முன் வந்திருக்கிறார்கள்.

#### குடியேற்றநாட்டு அந்தஸ்து தேவை.

வெள்ளையறிக்கையின் குறைகளை எடுத்துரைத்துப் பின் பேசியதாவது:—

அரசியல் அறிக்கை எல்லோருக்கும் அதிருப்தியைக் கொடுத்திருக்கிறது. இரண்டு முக்கிய அம்சங்களை நான் குறிப்பிடுகிறேன். நாம் ஏகாதிபத்தியத்திற்குள் இருக்கவேண்டுமானால் குடியேற்ற நாட்டு அந்தஸ்தைக் கொடுக்கவேண்டுமென்று கேட்டு வந்திருக்கிறோம். காலக்கிரமத்தில் அந்த அந்தஸ்தைக் கொடுப்பதே உத்தேசமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் ௧௯௩௧-ம் வருஷத்திய சட்டத்தில் குறிப்பிட்டது குடியேற்ற நாட்டு அந்தஸ்தாவென்ற சந்தேகத்தைச் சில உத்தியோகஸ்தர்கள் கிளப்பினார்கள். அது ௧௯௨௯ அறிக்கையிலேயே தொக்கியிருக்கிறதென்று ௧௯௨௯-ல் லார்டு இர்வின் சொன்னார். அதன்மேல் காமன்ஸ் சபையில் நடந்த விவாதத்தில் இப்பொழுதே குடியேற்ற அந்தஸ்துடையதாக இந்தியா இருக்கிறதென்று மிஸ்டர் பென் கூறினார். இந்த அஸ்திவாரத்தைக் கொண்டே சர்வகக்ஷி மகாநாட்டு யாதாஸ்து தயாரிக்கப் பட்டது. முதல் சர்வகக்ஷி மகாநாட்டிலும் ௩ பிரிட்டிஷ் கக்ஷிகளின் பிரதிநிதிகளும் இதை ஒப்புக்கொண்டார்கள். மகாநாட்டு முடிவில் சில தாற்காலீகப் பாதுகாப்புகளுக்குட்பட்டு அதிகாரத்தை இந்தியாவிடம் ஒப்புவிப்பதே நோக்கமென்று பிரதம மந்திரி சொன்னார். உ-வது மகாநாட்டில் இது ஊர்ஜிதம் செய்யப்பட்டது. இதனால் பார்லிமெண்டு இஷ்டப்படி படிப்படியாக இந்தியாவில் அபிவிருத்தி ஏற்படலாமென்ற வாதத்திற்கு இடமில்லாமற்போகிறது. கவர்ன்மெண்டு அறிக்கை இந்த உறுதிமொழியை நிறைவேற்றி வைக்கக் கூடியதாக இருகிறதா? இல்லையென்றே சொல்லவேண்டும். இந்தியாவின் அந்தஸ்தை ஒப்புக்கொண்டு அதில் கொண்டுபோய் விடக்கூடிய பட்டயத்தைக் கொடுக்கவேண்டும். ஸைமன் கமிஷனும் காலக்கிரமத்தில் தானாகவே அபிவிருத்தி யடையக்கூடிய திட்டத்தை ஏற்படுத்த வேண்டுமென்று தான் சிபார்சு செய்தது. ஆகவே, சுய ஆட்சியைக் கொடுப்பதாக உறுதிமொழி கூறவில்லையென்றும், படிப்படியாகச் சீர்திருத்தங்களைக் கொடுப்பதாகவே கூறியிருப்பதாகவும் ஸர் ஸாமுவேல் ஹோர் சொல்லியிருப்பது நாம் திடுக்கிடும்படி செய்திருக்கிறது.

#### பெரும் ஏமாற்றம்.

முதலாவது சர்வகட்சி மாகாட்டுமுடிவில் நமது போராட்ட காலம் முடிந்துவிட்டதென்றும், பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இந்தியாவைப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் ஏனைய குடியேற்ற நாடுகளுக்குச் சரிசமத்துவமான அந்தஸ்துக்கு உயர்த்த உத்தேசித் திருக்கிறார்களென்றும் நினைத்துக் கொண்டு நாங்கள் திரும்பினோம். தேசம் முழுவதும் கவர்ன்மெண்டு அறிக்கையைப் பரிசீலனை செய்திருக்கிறது. நமது நம்பிக்கையை அது பூர்த்திசெய்வதாக இருக்கவில்லை யென்ற அபிப்பிராயத்துக்கு தேசம் வந்திருக்கிறது. கிரேட்பிரிட்டன் இவ்வளவு காலமாக ௩௫ கோடி ஜனங்களுக்குத் தான் டிரஸ்டியாக இருப்பதாகச் சொல்லிக் கொண்டு வந்தது. இந்தியாவின் க்ஷேமத்தையே தாங்கள் முக்கியமாகக் கவனிப்பதாகவும் பிரிட்டிஷார் சொல்லிவந்தனர். ஆனால், அந்தக் கட்சியை இப்பொழுது அவர்கள் விட்டுவிட்டார்கள். கிரேட்பிரிட்டன், பிரிட்டிஷ் இந்தியா, இந்திய இந்தியா இவைகளின் உரிமைகளைச் சமரஸப்படுத்துவதே இப்பொழுது இந்தியாவைப் பொறுத்த வரையில் பிரச்சினையென்று இந்தியா மந்திரி சொல்லிவிட்டார். டிரஸ்டு எப்பொழும் டிரஸ்டாகவே இருக்கக்கூடும். டிரஸ்டி பாசம் கேட்பதற்கில்லை. அறிக்கையில் கண்டுள்ள பிரேரணைகளிலும் பிரிட்டிஷ் உரிமைகளை எவ்விதத்திலும் விட்டுக்கொடுத்துவிடவில்லையென்று ஸர் ஸாமுவேல்ஹோர் பிரிட்டிஷாருக்கு உறுதி கூறியிருக்கிறார். இதுதான் இந்த அறிக்கையில் கண்டுள்ள பிரேரணைகளைப்பற்றிய உண்மை. கிரேட்பிரிட்டனில் ஆதிக்கம் எல்லையில்லாத காலம்வரை இந்தியாவில் நிலைத்திருக்கும்படி செய்யக்கூடிய வழியிலேயே இந்தப் பிரேரணைகள் தயாரிக்கப் பட்டிருக்கின்றன. இந்தியா கவர்ன்மெண்டில் கிரேட்பிரிட்டனும் இந்தியர்களுடன் கூட்டுப் பங்காளியாக இருக்கவேண்டுமென்று சொல்லுவது குடியேற்ற நாட்டு அந்தஸ்தைக் கொடுப்பதாகச் சொல்லியிருப்பதற்கு முரணானதாக விருக்கிறது. மன்னர் சபையின் சமீபத் தீர்மானங்களிலிருந்து அவர்களுடைய அபிப்பிராயத்திலும் பிற்போக்கு ஏற்பட்டிருக்கிறதென்று தெரிகிறது. மன்னர்களில் பலர் ஆதியில் தெரிவித்த கொள்கையைக் கைவிட்டு விட்டார்களென்று தெரிகிறது. அவர்களின் அந்தஸ்தைப் பாதுகாத்துக்கொள்ளவும், ஜனநாயக உணர்ச்சி சமஸ்தானங்களில் நுழையாமல் தடுக்கவும் பாதுகாப்புகளை ஏற்படுத்திக் கொள்ளுவதிலேயே அவர்கள் கண்ணுங் கருத்துமாக விருக்கின்றனர். பிக்கனீர் மகாராஜா போன்றவர்கள் வீரமாகப்பேசிய போதிலும் அந்தக் கோஷ்டியினரில் பலர் பேரத்திலேயே நிற்கிறார்கள். இவ்வித நிலைமையில் அகில இந்திய சமஷ்டி ஏற்படுவது சந்தேகத்திற்கு இடமானதாக இருக்கிறது.

#### விடுதலைக்குப் போராடுக.

நான் அவநம்பிக்கைப் படுபவனன்று நீண்டகாலப் போராட்டம் முன்னிற்கிறதென்றே நானிருகிறது. இந்தியப் பிரச்சினையைத் திருப்திகரமாகத் தீர்க்காவிடில் அயர்லாந்தின் நிலைமையே ஏற்படுமென்று காமன்ஸ் சபையில் மிஸ்டர் பால்டுவின் சொன்னார். நாம் இப்பொழுதே அந்த ராஜபாட்டையில்லாதிருக்கிறோம். அரசியல் அறிக்கையில் அடங்கியுள்ள திட்டமானது அதிலிருந்து நம்மைத் திருப்பிவிடக் கூடியதாக இருக்கவில்லை. இந்தப் பிரேரணைகளை வெகுதூரம் மாற்றிக்கொண்டாலன்றி பல குறைகளுக்குள்ள அரசியலை நாம் ஒப்புக்கொள்ள வேண்டி வரலாம். பொதுஜன ஆதரவுள்ள கட்சியிருந்தால் அதைக்கொண்டும் பலனடையப் பார்க்கலாம். தேசத்தின் இந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில் எல்லா அரசியல் கட்சிகளும் ஒன்றுபட்டு வேலை செய்ய வேண்டும். நமக்குமுன் போராட்டத்தை நடத்தி வந்தவர்களில் பலர் அவர்களுடைய முன்னோர்களிருக்கும் இடத்திற்குப் போய்விட்டனர். நாமும் மறைந்து போகக்கூடிய கோஷ்டியினராகி வருகிறோம். ஆகவே, இளைஞர்களுக்கே நான் சில வார்த்தைகள் சொல்லிக் கொள்ளுகிறேன். உங்களுடைய வேலை கஷ்டமானதாக இருந்தாலும் அதை ரியமடையாதீர்கள். பெண்டுலம் முன்னும் பின்னும் ஆடலாம். இருந்தாலும் கடியாரம் முன் நகர்ந்துகொண்டே இருக்கும். சுயேச்சைக்கு ராஜபாட்டை இல்லை. தோல்விகள் ஏற்படலாம். ஆனால், தோல்விகள் நம்மை ஊக்குவிக்க வேண்டும். ஆகவே, நமது லட்சியமாகிய தேச சுதந்திரம் கிடைக்கும் வரையில் அபிவிருத்திக்காகப் போராடி வாருங்கள்.

#### ராமநாதபுரம் ஜில்லா போர்டு.

௧௯௩௩-ம் ஏப்ரல்மீ உ௨வ சனிக்கிழமை காலை ௧௧-மணிக்கு கமுதி போர்டு உயர்தர பாடசாலைக் கட்டிடத்தில் இராமநாதபுரம் ஜில்லா போர்டு சாதாரண மீட்டிங்கு நடைபெறும்.

#### கஸ்தூரிபாய் சுதேசி ஸ்டோர்.

திருச்சி பெண்கள் சுதேசி சங்கச்சார்பில் ஆரம்பிக்கப்பட்டுள்ள “கஸ்தூரிபாய் சுதேசி ஸ்டோர்ஸ்” திரு ச. ராஜகோபாலாசாரியரால் திருச்சி சைனபஜார் ரோடில் ஏப்ரல் ௭-௨ திறந்து வைக்கப்பட்டது.







# ரப்பரின் எதிர்காலம்.

ரப்பர் நிலைமையைச் சீர்திருத்த அதன் உற்பத்தியைக் கட்டுப்படுத்த வேண்டுமென்பதாக ஓர் கட்சியும், வியாபாரம் மழமழப்பு ஏற்பட்டால் தானாகவே ரப்பர் நிலை சீர்ப்பட்டுவிடும்; ஆதலால் கட்டுப்பாடு தேவையில்லை என்ற மற்றொரு கட்சியும் இருப்பதாகச் சொல்லும் ‘தமிழ்நேசன்’ மேலும் எழுதுவதாவது:—

தற்போது ரப்பர் பயிரிடப் பட்டிருக்கும் ஏக்கரேஜ் எடு லக்ஷத்திற்கு மேலாகிறது. ௮0 லக்ஷம் வரையிலும் கூட கிட்டதட்டக் கணக்கிடலாம். மூன்றின் புள்ளியையே வைத்துக்கொண்டாலும் கூட இந்த நடைபெறுமாண்டில் உற்பத்தியாகக் கூடிய ரப்பர் ௧௧ லக்ஷம் டன் என்று மதிப்பிடப் படுகிறது. அடுத்த வருஷம் ௧௧,௯௫,000டன் ஆகும். ௧௯௩௪ல் ௧௨,௪0,000 டன்களாகும். ௧௯௩௫ல் ௧௨,௬௫,000 டன்கள் வரையில் உற்பத்தியாகும். தற்போது உள்ள பிரகாரம் வருஷாந்தர ரப்பர் செலவழிவு ௬,௫0,000 டன்களாகின்றன. ஆதலால் சர்க்கார் தலையிட்டு உற்பத்தியைக் கட்டுப்படுத்தியே யாகவேண்டுமென்று கட்டுப் பாடுவேண்டு மென்று ௧௧தியார் கூறுகின்றனர்.

அடுத்த சில வருஷங்களில் ரப்பர் உற்பத்தியைப்பற்றி திட்டமிடுவதில் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டிய முக்கியமான வொரு அம்சமென்னவெனில் பால் வெட்டக்கூடிய அவ்வளவு ஏக்கரும் வெட்டப்படுமென்று கணக்கிடுவதல்ல. பால் வெட்டுவது கூலி ஆட்கள் அகப்படும் வசதியையும் பொறுத்திருக்கிறது. இன்னொரு விஷயமும் கவனிக்கப்படவேண்டும். தற்போது ரப்பர் செலவழிவு மிகக் குறைந்து போயிருந்தாலும் ௧௯௨௯ல் ௮00,000 டன்னுக்குமேல் செலவாயிற்று. மற்றும் ௧௯௨௯ம் ஆண்டிலிருந்து பல புதிய உபயோகங்களும் கண்டு பிடிக்கப்பட்டு வருகின்றன. ஆதலால் இப்பொழுது உலகில் ரப்பரை உபயோகித்துச் செய்யப்படும் பொருள்கள் ௧௯௨௯ஐக் காட்டிலும் எவ்வளவோ அதிகம். ௧௯௨௯ம் வருஷ நிலைமைக்கு வருவதென்பது அந்த வருஷத்தில் உபயோகப் படுத்தப்பட்ட ரப்பரைக் காட்டிலும் இன்னும் அதிக ரப்பர் உபயோகப்படுத்தப் படுமென்பதாகும்; இதற்குப் போதிய ஆதாரங்கள் இருக்கின்றன.

வியாபாரமும் கைத்தொழில்களும் விழுந்து போன சென்ற மூன்று வருட காலத்திலும் அமெரிக்கா தவிர்த்த இதர நாடுகளில் ரப்பர் செலவு அதிகரிக்கிறதே ஒழிய குறையவில்லை. இதனால் ரப்பருக்கு நல்ல ஜனப்பிரிய மிருப்பது விளங்குகின்றது. ருஷ்யா தேசத்தைப் பொருளாதார நிலைமையில் வலுத்த ஒரு தேசமாகச் சொல்லமுடியாது. ஆனால் அத்தேசத்தினுடைய தொழில் ஸ்தாபனங்கள் ஒழுங்கு பட்டு வரும் இது காலையில் அது அதிகப் படியான ரப்பரை வாங்குகிறது.

ஆனால் ரப்பர் அழிவும் உற்பத்தியும் இன்னும் பல வருடங்களுக்கு சரி சமனாக ஒழுங்கு பட்டு வாராது என்று சொல்லுபவர்கள் அநுவசியமாக வீணமுகை அழுகிறார்கள். உலக மகா யுத்தத்தின் போதும் அதற்கு முன்பும் வருஷா வருஷம் எடுபட்ட ரப்பரெல்லாம் ௩00,000 டன்னுக்குள்ளேயே. அதற்குப் பிறகு ௮00,000 டன் வரையில் செலவழிவு உயர்ந்திருக்கிறது. அதாவது நூற்றுக்கு ௧௭0 வரையில் ஏறியிருக்கிறது. இன்னமொரு நூற்றுக்கு ௫0 அதாவது மொத்தம் செலவழிவு வருஷத்துக்கு ௧௨௫0,000 டன்கள் வரையில் இன்னும் ஒரு சில வருடங்களுக்குள் ஏற்படாதென்பதை நாம் எப்படித் திட்டமாய்க் கூறக் கூடும்? சென்ற மாதம் ‘பெனின்ஷியல் நியூஸ்’ பத்திரிகை ‘அநேக காரியங்களுக்காக உபயோகிக்கப்படும் வகையில் ரப்பர் உபயோகம் இன்னமும் குழந்தைப் பருவத்தில் தானிருக்கிறது’ என்று மிஸ்டர் ஏர்ரிக் மில்லர் ஒரு வியாசத்தில் எழுதியுள்ளார்.

உற்பத்தியிலும் வியாபாரத்திலும் சிரத்தையுள்ள ஐரோப்பியர்கள் கட்டுபாடு வேணுமென்று கதறி யழுகிறார்கள். ஏனெனில் ஏதாவதொரு செயற்கை முறையில் ரப்பர் விளைவு கட்டுப் படுத்த பட்டாலன்றி கூடிய சீக்கிரத்தில் அவர்கள் பெட்டியுடைந்து முறிந்து விடுவார்களென்ற பயம் பிடித்திருக்கிறது. அநேக தோட்டக்காரர்கள் பண நிலைமையில் திண்டாட்டமா யிருக்கிறார்கள். சிலர் தங்களுடைய செலவைக் குறைக்கும் பொருட்டு எவ்வளவு பால் வெட்ட முடியுமோ இவ்வளவையும் பித்துக் கொண்டவர்கள் மாதிரி வெட்டித் தள்ளுகிறார்கள். எப்படியாவது காசு வேண்டி யிருக்கிறது. என்ன செய்வார்கள் பாவம்!

ஆதலால் அவர்களுடைய உற்பத்தியில் ௫0% கட்டுப்படுத்துவதென்றாலோ அவர்களுடைய வருமானம் குன்றிவிடும். உடனே விலை ஏறினாலல்லது அவர்கள் பாடு வெள்ளம் வடியும்போது வதைக்கும் என்ற நிலைமையிலாகி விடும். ஆதலால் எந்த விதமான கட்டுப்பாட்டு திட்டம் கொண்டு வரப்பட்டாலும் முதல் இரண்டொரு வருடங்களுக்கு அது இந்த நிலைமையில் ஏதும் நன்மையைச் செய்யுமோ என்பது பலருக்கு சந்தேகமாயிருக்கிறது.

பெரிய அமெரிக்கக் கம்பெனியார் கையிருப்பில் ஒரு வருஷத்திற்கு வரகூடிய சரக்கு வைத்திருப்பதாகத் தெரிகிறது. இந்த சப்ளை முழுவதும் தீரும் வரையில் ரப்பர் விலையில் ஏதும் ஏறுமென்று கூறுவதற்கில்லை. அமெரிக்கர்களுக்கு ரப்பர் கட்டுப்பாடு என்றால் எப்போதும் வேப்பங்காயாயிருக்கிறது. அநேகர் அது கூடவே கூடாதென்கின்றனர். ஆதலால் கட்டுப்பாடு ஏற்பட்டாலும் அவர்கள் தாராளமாக மார்க்கட்டில் வந்து வாங்க மாட்டார்கள். அதனால் விலை விழுந்துதான் கிடக்கும். அவர்கள் ஏராளமான ஸ்டாக் வைத்திருப்பதால் கெட்டிதனமாகவும் அழுத்தமாகவும் இருக்கின்றனர்.

ஆனால் நல்லகாலம் திரும்பினதும் ரப்பர் செலவழிவும் அதிகப்படு மென்பது நிச்சயம். அப்படியில்லா விட்டால் ஐரோப்பியத் தோட்டக்காரர்கள் நிலைமை மிக மோசமாகி விடும்.

பிரிட்டன் சமீபகாலத்தில் ரப்பர் டயர் உற்பத்தி செய்வதில் சிறந்து விளங்குகின்றது. சென்ற ஐந்துவருடங்களில் சில முக்கியமான தேசங்களினின்றும் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்த டயர் புள்ளிகளால் பிரிட்டனின் திருப்திகரமான அம்சம் விளங்கும்.

ஆயிரக் கணக்கில் மொத்தம் ஏற்றுமதியான டயர்கள்:—

| | பிரிட்டன் | அமெரிக்கா | பிரான்சு |
|---|---|---|---|
| ௧௯௨௮ | ௮௪0 | ௨௯௯௫ | ௧௮௪௨ |
| ௧௯௨௯ | ௧௨௮௫ | ௨௯௭௧ | ௧௬௭௮ |
| ௧௯௩0 | ௧௫௮௯ | ௨௯௮௬ | ௧௬௭0 |
| ௧௯௩௧ | ௧௪௯௮ | ௧௯௯௮ | ௧0௨௧ |
| ௧௯௩௨ | ௧௬௫௯ | ௧0௧௯ | ௮௮௧ |

மேற்படி புள்ளிகளிலிருந்து டயர் வியாபாரம் ஏறியிற்ற ௧௯௨௯-ம் வருஷத்திலிருந்து இப்பொழுது ௬௯% விழுந்து விட்டதென்பது விளங்கும் இதே காலத்தில் அமெரிக்க டயர் ஏற்றுமதி வியாபாரத்தில் ௫௯% இறங்கி விட்டது. பிரிட்டனுடைய டயர் வியாபாரம் நூற்றுக்கு எட்டரை வீதம் உயர்ந்திருப்பதும் தெரிகிறது. ௧௯௩௨ல் பிரிட்டனே முதன்மை பெற்று நிற்பதும் விளங்குகிறது. ஆயினும், அமெரிக்க வியாபாரம் மிகந்து வந்தால்தான் ரப்பர் விலை சுபீரென்று ஏறும். அமெரிக்காவில் ஓடும் கார்களில் சுமார் ௫0,000,000 டயர்கள் கான்வாஸ் வரையில் தேய்ந்து போயிருப்பதால் இவ் வருஷப் பிற்பகுதிக்குள் மாற்ற வேண்டியவைகள் என்று தெரிகிறது. அப்படியாயின் டயர் தொழில் மறுபடியும் ஏறுவதில் சந்தேகமில்லை.

#### கட்டுப்பாடு தேவை.

இலங்கையில் நடைபெற்ற தோட்டக்காரர்கள் சங்கத்தில் திரு. பென்ஹாம் பேசியதாவது:—

“மலேயாத் தோட்டச் சொந்தக்காரர் சங்கம் மலேயா, பிரிட்டிஷ் போர்னியோ, இலங்கை முதலிய விடங்களிலுள்ள ரப்பர் தோட்டங்களில் ௪௦0க்கு ௬௯ வீதம் சுதேச வாசிகளுக்கே சொந்தமாக விருக்கின்றன வென்பதாகக் கூறப் படுகிறது. ஆகவே ரப்பர் வர்த்தகத்தை அபிவிருத்தி செய்யும் பொருட்டு முக்கியமாகச் சுதேச ரப்பர் தோட்டக்காரர்களே தீவிரமாக முயற்சி செய்ய வேண்டும். உலகப் பொருளாதார நெருக்கடி தீர்ந்து விட்டால் ரப்பர் வர்த்தகம் அபிவிருத்தி யடையுமென்று கூறுவதற்கில்லை. கடந்த சிலவருடங்களாக கையிருப்பு ரப்பர் மிகவும் அதிகரித்து விட்டது. ஆதலின் ௧௯௩௩ம் வருடத்தில் கையிருப்பு ரப்பர் முழுவதும் விற்பனையாகிவிடு மென்று எதிர்பார்ப்பதில் பிரயோஜனமில்லை. கடந்த சில வருடங்களாகவே தோட்டத் துரைமார்கள் ரப்பர் வர்த்தகத் தொழில் பெரிதும் பாதிக்கப் பட்டதைக் கூடப் பொருட்படுத்தாது உற்பத்திச் செலவுகளைக் குறைக்க முயன்றனர். அவர்களுடைய முயற்சி ஓரளவு பலிதமடையாமலில்லை. அவர்கள் இனி ரப்பர் உற்பத்தியை வெகுவாகக் கட்டுப்பாடு செய்து ரப்பர் வர்த்தகத்தைப் பெரிதும் அபிவிருத்தி செய்து கொள்ள முயற்சி செய்யவேண்டும். ரப்பருக்குத் தேவை அதிகமாக ஏற்படும் பொருட்டும் அவர்கள் முயற்சி செய்ய வேண்டும்.

#### கொ. லட்சுமிபுரம்.

இந்நகர உயர்திருவாளர் க. சொ. அரு அருணாசலம் செட்டியாரவர்கள் ஸ்தாபித்திருக்கும் சொக்கலிங்க வித்தியா சாலையில் நாளது ஆங்கிரச ஆண்டு பங்குனித் திங்கள் உ௬-ம் நாள் பிற்பகல் ௬ மணிக்கு “கம்பர் விழா” உதவி ஆசிரியர் திரு. அருணாசலம் பிள்ளையவர்கள் தலைமையில் மாணவ மாணவிகள் கடவுள் வாழ்த்துப்பாட இனிது ஆரம்பமாயிற்று. சொ. வி. மாணவர் மு. சிவராமன், சித. சொக்கலிங்கம், அ. ராமமூர்த்தி, சா. வீரப்பன், ரெ. நடராஜன், நா. சீனி, வை. லெட்சுமணன், சா. பொன்னையா, கரு. பொன்னையா, கா. சுப்பு முதலிய மாணவர்கள் “கம்பரும் அவரது நூலும்” என்ற பொருள்பற்றி பிரசங்கங்கள் செய்தனர். தலைமை ஆசிரியர் திரு.க இராமாநுஜாச் சாரியாரவர்கள் ஒரு அரிய சொற்பொழிவாற்றினார்கள். நாட்டு வாழ்த்து பாடப்பெற்றதும் சபையோர்க்கு கற்கண்டு வழங்கப்பெற்று விழா இனிது நிறைவெய்தியது. (நிருபர்)

## கடிதங்கள்.

### கொ. லட்சுமிபுரம்.

லெக்ஷ்மிபுரம் ஸ்ரீமீனாக்ஷி சங்கத்தின் ஏழாவது ஆண்டு பதினோராம் மாதக் கூட்டம் சானது ஆங்கீரஸ ஆண்டு பங்குனித் திங்கள் ௩௦ம் நாள் பிற்பகல் சமணிக்கு சொ. வி. தலைமை ஆசிரியர் திரு. எ. இராமானுஜாச்சாரியாரவர்கள் தலைமையில் மாணவ மாணவிகள் கடவுள் வாழ்த்துப் பாட இனிது ஆரம்பமாயிற்று. அன்றைன்று "குருபக்தி" என்ற விஷயத்தைப் பற்றி சொ. வி. மாணவர் மு. சிவராமன் நா. வெங்கட்டராமன், இராமமூர்த்தி, சீனி, நடராஜன், கரு. பொன்னையா முதலியோர் பிரசங்கம் செய்தனர். தலைவரவர்கள் தகுந்த முடிவுரை பகர்ந்ததும் நாட்டு வாழ்த்துப் பாடப்பெற்று கூட்டம் இனிது நிறை வெய்தியது என்று ஒருவிருபர் எழுதுகிறார்.

### பட்ட மங்கலம்.

சௌந்தரநாயகி பந்தடிமால்:— சென்ற பங்குனிமீ உஅவ திங்கட்கிழமை சௌந்தரநாயகி பந்தடிமாலின் சார்பாக நடை பெற்ற பியாட்மின்டன் போட்டி விளையாட்டின் கடைசி விளையாட்டும் பரிசளிப்பு விழாவும் பட்டமங்கலம் அரு. மெ. சு. முத்தப்பா செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. செட்டியார்கள் பல பகுதிகளிலிருந்தும் சுமார் (௬௦௦) பேர் வரை வந்திருந்தார்கள். கடைசி விளையாட்டில் வெற்றி பெற்ற (தே—தே பிரண்ஸ் டீமை சேர்ந்த கண்டரமாணிக்கம் ஆவி. கு. ராம. ராமசாமி செட்டியாருக்கும் ஷெயூர் சி. பழ. சொ. சண்முகம் செட்டியாருக்கும் வெள்ளி கப்பும் ரன்னர்களான கண்டரமாணிக்கம் சி. ராம. பழ. பழநியப்ப செட்டியாருக்கும் கீழச்சீவல்பட்டி கிழ மெ. ராம. மெய்யப்ப செட்டியாருக்கும் நடுவில் தங்கம் பதித்த வெள்ளி மெடலும் தலைவரால் பரிசளிக்கப்பட்டன. பரிசளிப்பு விழாவும் காலை கூஇ மணிக்கு இனிது நிறைவேறியது.

### ராங்கியம்.

#### விவேகாநந்த வாசகசாலை.

இவ்வாசகசாலையில் முதல் ஆண்டு முதலாவது கூட்டம் ௨-அ-௩-௩௩வ மாலை சமணிக்கு மாணவர்கள் கடவுள் வாழ்த்துக் கூற காரியதரிசி அ. மு. முத்துராமஞ் செட்டியார் அக்கிராசனம் வகித்து தலைவர் முன்னுரைக்குப் பின்னர் திருவாளர்கள் வ. அருணாலம் வ. சுப்பிரமணியம் சுப. நடராஜன் சி. க. த. சோமசுந்தரம் முதலியோர்கள், முறையே வாசகசாலை முன்னேற்றம், கல்வி, குரு விருப்பேல், மானிடப் பிறவி என்ற விஷயங்களைப் பற்றி இனிமையாகச் சொற்பொழி வாற்றினார்கள். தலைவர் இடையிடையே ஒவ்வொன்றுக்கும் தக்க ஆராய்ச்சியுடன் விஷயங்களை விரித்து அனைவர்கள் மனதிலும் பதியுமாறு செய்தது குறிப்பிடத் தக்கது. கடைசியாக தலைவரின் அழகிய முடிவுரையுடன் வந்த ஜோபசாரக் கூறப் பெற்று மங்கள வாழ்த்துடன் இனிது நிறை வெய்தியது என்று உப காரியதரிசி எழுதுகிறார்.

### டர்பன்.

#### திருவள்ளுவ நாயனார் தரும பாடசாலை.

மேல் குறிப்பிட்டுள்ள பாடசாலையில் இலவசமாக ஏழை எளியவர்களுடைய பிள்ளைகளுக்குச் செந்தமிழ் நாடாகிய தென் பாதக்கண்டத்தின் தாய் பாஷையாகிய தமிழை மேம்பாடாகக் கருதி அதமழியாமல் இருப்பதற்காகவேப் பள்ளிக்கூடமும் உபாத்தியாயர்கள் வெகு முயர்ச்சியுடன் ௩௨௦ சிறுவர் சிறுமிகளுக்குக் கற்பித்து வருகின்றனர். சிற்சில பிள்ளைகள் சோம்பலடையாவண்ணம் சுறுசுறுப்புள்ளவர்களாக விருக்க வேண்டுமென்று உடற் பயிற்சி முறைகளை உடல் நலங்கருதி வாரத்திற்கு ஒருமுறை வியாழக்கிழமை தோறும் ௫-௩௦ மணியிலிருந்து ஆறரை மணி வரையில் டர்பன் மகா நகரத்தில் பெயர் பெற்று வரும் நான்கு உடற்பயிற்சி தின சங்கங்களுக்கு தலைமை போதகாசிரியருமான செ. அண்ணாமலை பிள்ளையவர்களைக் கொண்டு சாதனங்களை கற்பித்து வருகின்றனர்.

தாய் நாட்டு பள்ளிக்கூடங்களில் சிறுவர் சிறுமிகளுக்கு உடற்பயிற்சி சாதனங்களை கற்பித்து வந்தால் அவர்கள் நாளடைவில் ஆரோக்கியம் சரீர சுகம் தேகவன்மையுமாய் புகழ் பெற்ற வீரர்களாயு மிருப்பார்கள் என்பதற் காக்ஷேபணமில்லை.

## தீண்டாமை விலக்கு.

### ஓர் வேண்டுகோள்.

திரு. மா. மெய்யப்பா எழுதுவது.

தற்காலமிருக்கும் நிலைமையில் இந்தியர்களாகிய நாம் ஒற்றுமைப்படாவிட்டால் சுயராஜ்யத்தின் எல்லையை அடைய முடியாதென்பது உலக வெளிப்படை. அதுபற்றி நான் மிகப் பேச விரும்பவில்லை. ஏற்கனவே "இந்தியா" வில் அநேக வகுப்புகளிருக்கின்றன. அவையெல்லாம் போதாதென்று ஹிந்து என்று சொல்லிக்கொள்ளும் ஒரு வகுப்பாருக்குள் ஒருசிலரைத் தீண்டாதவர்களென்று ஒதுக்கிவைத்திருப்பதை நினைத்தால் ஹிந்து என்று சொல்லிக்கொள்ளும் ஒவ்வொருவரும் வெட்கமடையாதிருக்கமுடியாது. ஏனெனில் தீண்டாமைக்கு சாஸ்திரம் இடமளிக்கவில்லை. முன் காலத்தில் ஹிந்துக்களுக்குள் மிக உயர்ந்தவர்களெனக் கருதப்படும் பார்ப்பனர்களுக்குக் குருத்திரர்களெனக் கருதப்படுபவர்களுக்கும் உற்பத்தியாகும் மக்களெல்லாம் தீண்டாதவர்களெனக் கருதப்பட்டார்கள். ஆனால் இப்பொழுது நம் தென்னாட்டில் தேவதாசிகளின் வீடுகளுக்கோ குறைவில்லை. அவர்களுடன் சேருபவர்களின் வருப்புகளோ எண்ணிலடங்காதவை. இப்படியிருக்க தேவதாசிகளையும் தேவதாசியர்களுக்கு உற்பத்தியாகும் குழந்தைகளையும் தற்காலத்தில், சனாதனிகள், சனாதனிகளென்று சொல்லிக்கொள்ளும் ஜாதி ஹிந்துக்கள் கோவிலில் நுழைய அனுமதிப்பதற்குத் தயங்குகிறார்களில்லை. ஆனால் நம் ஹிந்துக்களுக்குள் ஒரு வகுப்பாராகிய சகோதரர்களுக்கு கோவிலில் நுழைய அனுமதி தருகிறார்களில்லை. என்னே! உலகின் போக்கு! அவர்களின் புல்லறிவை யாரே விளக்க வல்லார்!

தென்னாட்டு நண்பர்களாகிய உங்களிடத்திலிருந்து நான் நாடுவதென்ன வென்றால், யுவர்கள் ஒவ்வொருவரும் தீண்டாமை விலக்கிலீடுபட வேண்டுமென்பதொன்று. ஹிந்துக்கள் யாவரையும் கோவிலுக்குள் அனுமதிக்க வேண்டுமென்பது மற்றொன்று. மேலும் ஹிந்து முஸ்லீம் ஒற்றுமைக்காகவும் உழைக்க வேண்டும். இவை மூன்றுமேதான் சுயராஜ்யத்தின் அடிகோலிகளாக இருக்கமுடியும்.

நான் சமீபத்தில் மகாத்மாஜீ அவர்களுக்கு விடுத்த கடிதத்தில் தீண்டாமை விலக்கு சம்பந்தமாக என்ன செய்ய வேண்டுமென எழுதிக் கேட்டிருந்தேன். அதற்கவர்கள் விடுத்த பதிலில் "ஹரிஜன்" என்ற பத்திரிகையிலிருந்து யாவுமறிந்து கொள்ளலாமெனத் தெரிவித்திருக்கிறார்கள். ஆகையால் தென்னாட்டு மக்களாகிய உங்களில் ஆங்கிலமறிந்த ஒவ்வொருவரும்—அதிலும் விசேஷமாக மாணவர்களும்—மேற்படி பத்திரிகையை வாங்கிப்படிக்க வேண்டுகிறேன். சந்தர்ப்பங்கள் கிடைக்கும் காலையில் தீண்டாமை விலக்கு சம்பந்தமான கட்டுரைகளைத் தென்னாட்டுப் பத்திரிகைகளில் வெளியிடுவேனென்பதையும் தெரிவித்துவிட விரும்புகிறேன். பாபுஜி விடுத்த கடிதத்தின் நகலையும் இதன் கீழ் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

### காந்தியடிகள் கடிதம்.

எர்வாடா சிறை
உக மார்ச்சு ௩௩.

அன்புள்ள நண்ப,

தங்கள் கஉ-ம் தேதி கடிதத்திற்கு வந்தனம். ஏழை ஹரிஜனங்களுக்குத் தாங்கள் கதராடைகள் வழங்கியதையும் தீண்டாமை விலக்குக் கூட்டத்திற்குத் தலைமை வகித்ததையும் கேட்க மகிழ்வடைகிறேன். நீங்கள் செய்ய வேண்டிய வேலைகள் இன்னும் ஏராளமாக விருக்கின்றன. இவற்றை 'ஹரிஜனை' பத்திரிகையிலிருந்து படித்தறிந்து கொள்ளலாம்.

உங்கள் உண்மையுள்ள,
எம். கே. காந்தி.



## விளம்பரம்.

ஸ்ரீமுகவூ சித்திரைமீ ௩௨ தேவகோட்டை சேகரம் இரவுசேரி ஸ்ரீசுடலை மாடசுவாமி கோவில் டிரஸ்ட்டி தேவகோட்டை சிதம்பனி லேட் புதி. கா. காளியப்ப பிள்ளையவர்களுக்குப் பதிலாக ஷை புதி. கா. புதி. நடராஜபிள்ளையை டிரஸ்ட்டியாக நியமனம் செய்திருக்கிறது.

இரவுசேரி ஸ்ரீசுடலை மாடசுவாமி கோவில் ஊரவின் முறையார்

## நோட்டீஸ்.

தேவகோட்டை
டி. மு. கோர்ட்டு.

1932-வூ S. C. நிம்பர் 1049.

வாதி.
கா. கு. இராமனுதன் செட்டியார்.

பிரதிவாதி.
மண்டயப்பட்டி பெரியய்யா.

வாதி வகையறுவுக்குப் பாத்தியமான இருவார தர்மாசனம் பொய்யலூர் கிராமத்தில் தாம் உழுத நிலங்களின் 1340,1341-ம் பசலிகளின் வாரம் வகையறு குடுக்கவேண்டிய ரூபாய் 16—9—9 யும் வரப்பற்ற வாதி ஷை நிம்பரில் பிராது செய்து 21—6—33 தேதிக்கி வாயிதா ஏற்பட்டிருக்கிறது. அன்று பகல் 10-மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி ஆக்ஷேபனையைத் தெரியப் படுத்திக் கொள்ளவேணும்.

எம். ஜி. முகுந்தராஜா.
வாதிவக்கில்
12—4—1933. தேவகோட்டை.

### வேலையில்லாக் கொடுமை!

வேலையில்லாக் கொடுமை நாடோறும் பெருகிவருகிறது. நமது இந்தியப் பல்கலைக் கழகத்திலிருந்து வருடந்தோறும் ஆயிரக்கணக்கான பட்டதாரிகள் வெளியே தள்ளப்படுகிறார்கள். ஆனால் இவர்கட்கு வேலை கொடுப்பார் எவரையும் காணோம். பதினாயிரக்கணக்காக ரூபாய் செலவுசெய்து பெரும் பட்டம் பெற்றவர்களுக்கு மாதமொன்றுக்கு ரூபாய் பத்துக்கூட சம்பளம் கிடைப்பது அரிதாகிவிட்டது. இதனால் தற்கொலை செய்துகொள்ளுவோர் தொகையும் அதிகரித்துவிட்டது. படித்தவர் நிலை தான் இவ்வாறு என்றால், விவசாயிகள் நிலை சிந்தனிலும் கொடிதாக விருக்கிறது. நல்ல விளைவு கிடைப்பதில்லை. கிடைத்தாலும் அது விற்பனையாவதில்லை. கடன்வாங்கிப் பயிர் செய்ததைத் திரும்பக் கொடுக்க வேண்டும். அதோடு வரிக்கொடுமை மிக அதிகம். இந்தியா நிலை இது. ஆனால் சாந்தகுரிஸ் என்ற இடத்தில் விளைவுப் பொருள் விலையாகாததால் அங்குள்ள காபி, தேயிலை, ரப்பர் முதலியன டன் கணக்காக தீ வைத்து எரிக்கப்பட்டன. அதோடு நில்லாது ஆடு முதலியவற்றை விற்க முடியாததாலும் அவற்றிற்கு இரைபோட இயலாது போனதாலும் அறுபதாயிரம் ஆடுகளைத் தீ வைத்துக் கொல்லவேண்டும் நிலைமை ஏற்பட்டுவிட்டதாம். என்னே வறுமையின் கொடுமை!

### தடை உத்தரவை மீறியதாக.

காரச்சியை விட்டுச் செல்லக்கூடாதென்று மாஜிஸ்திரேட் போட்டிருந்த தடை உத்தரவை மீறி கல்கத்தாக் காங்கிரசிற்குப் பிரதிநிதியாகச் செல்லவிருந்த ஒருவருக்கு கோர்ட்டு கலையும் வரை காவல் தண்டனை விதிக்கப்பட்டதாம்.



## சுசீலா.

(௨-ம் பக்கத் தொடர்ச்சி)

வும் நேர்ந்திராது. ஆயினும் எனது சொந்த ஜனங்களோடு சேர்ந்து வருவதற்கு நானே வெட்கமடைந்தால் அவர்களுடைய சீர்திருத்தத்திற்கு நான் எவ்வாறு உண்மையாய்ப் பாடுபடமுடியும்? தவிரவும் நீண்ட நாட்களுக்குப் பின்னர் சந்தித்த அவர்களுடைய வற்புறுத்தலான வேண்டுகோளையும் நிராகரிக்க விரும்பினேனல்லேன்' என்றாள். அதற்குள் கார் குன்றக்குடியைச் சமீபித்தது. அவ்வாலிபன் எவ்வளவு கேட்டுக்கொண்டும் சுசீலாவைச் சேர்ந்தவர்கள் இணங்காமல் ஊருக்கு வெளியிலேயே இறங்கிவிட்டனர். சுசீலாவும் அவனுக்கு வந்தனமளித்து அவர்களுடன் இறங்கிவிட்டாள்.

காரைக்குடி சேதுராமன் சிறந்த தேசியவாதி. தனவணிக வகுப்பைச் சார்ந்தவர். வயது உஎ இருக்கலாம். தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை மிகப் பெற்றவர். தாய் தந்தையர்களைச் சிறு வயதிலேயே யிழந்து விட்டவர். சொற்ப ஆஸ்தியுடையவர். கட்டுறுதியுள்ள உடலும் கண்ணிலே தோன்றிய நல்ல குணமும் எல்லோரையும் வசியப்படுத்தின. ஆயினும் இன்னும் இவருக்கு விவாகம் ஆகவில்லை. வாழ்ந்தாருக்கு வரிசை செய்யும் ஜாதியில் பணக்காரரல்லாத வாலிபர்களுக்கு என்னதான் நடக்கும்? மாரனை யொத்த அழகனாயிருந்தாலென்ன! வேலனை நிகர்த்த வீரனாயிருந்தாலென்ன! இப்பொழுது ஹரிஜனத் தொண்டில் ஈடுபட்டு அவர்களுடைய முன்னேற்றத்திற்காக மிகவும் உழைத்து வருகின்றார். அன்று குன்றக்குடிக்கு மோட்டாரில் வந்த வாலிபர் சேதுராமன் தான் என அன்பர்கள் உணர்ந்து கொண்டிருக்கலாம். சொந்த உபயோகத்திற்காக அவர் சிறிய காரொன்றும் வைத்திருந்தார். அவருடன் அன்று வந்திருந்த மற்றொரு வாலிபர் பவானந்தம் என்ற பழுத்த சமதர்ம வாதி. உயர்ந்த லட்சியங்களுடையவர். சிறந்த பிரசங்க நிபுணர். இதுவரையிலும் மணமாகாமலிருந்த சேதுராமனைக் கலப்புமணத்திற்குத் தயார் செய்துவைத்த கனவான் திரு. பவானந்தமே.

திருச்சி மிஸ் சுசீலாவுக்கும் திரு சேதுராமனுக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பாரின் முன்னேற்ற சம்பந்தமாய்ப் பல கடிதப் போக்கு வரத்துக்கள் நடந்தன. அவற்றின் மூலமாய் அவர்கள் 'அன்பு' ஊற்றெனச் சுரந்து வெள்ளமாய்ப் பெருக்கெடுத்தது. சில மாதங்களுக்குப் பின்னர் காரைக்குடியில் சேதுராமன் ஹரிஜனக் குழந்தைகளுக்காக ஓர் குருகுலம் ஸ்தாபித்தார். அவருடைய பொருளில் பெரும்பாகம் அதற்கு மூலதனமாய் வைக்கப் பெற்றது. திருச்சி சுசீலா அக்குருகுலத்துக்கு ஆசிரியராக இருக்க ஒப்புக் கொண்டு காரைக்குடிக்கே வந்து விட்டாள்.

நாட்கள் பல கடந்தன. சேதுராமன் குருகுலம் சிறந்த முறையில் நடந்து வந்தது. சுசீலாவுக்கும் சேதுராமனுக்கும் இடையிலே யிருந்த மாசற்ற அன்பு நாளுக்கு நாள் வளர்ந்து காலக்கிரமத்தில் காதலாக மாறிற்று.

முதன் முதலாகச் சேதுராமன் தனது காதலை வெளியிட்ட காலையில் பறச்சியாகிய தன் மீது ஓர் தனவணிக வாலிபர் காதல் கொள்ள முடியுமா என்று சுசீலா மிக வியப்படைந்தாள். குன்றக்குடியில் அன்று நேர்ந்த முதல் சந்திப்பிலேயே அவள் இதயத்தைச் சேதுராமன் கொள்ளை கொண்டு விட்டது உண்மையேயாயினும் தனது எண்ணம் ஈடேறப் போகிறதா என்ற ஏக்கத்தால் மிகவும் தவித்திருந்த சுசீலாவுக்கு சேதுராமன் தனது காதலை வெளியிட்ட அவ்வார்த்தைகள் கர்ணாமிருதமாயிருந்தன. பெரும்புயலில் அகப்பட்டுத் திக்குத்திசை தெரியாது கலங்கித் தவித்த மாலுமி கரையைக் கண்டதும் அடைந்த சந்தோஷத்தை விட அபரிமிதமான மகிழ்ச்சியை அவள் அடைந்தாள்.

எத்தகைய எதிர்ப்புக்களையும் லட்சியம் செய்யாமல் சேதுராமன் விவாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் சிறப்பாகச் செய்தார்.

குறிப்பிட்ட சுபதினத்தில் திரு. சேதுராமனுக்கும் திருமதி சுசீலாவுக்கும் விவாகம் அதி சிறப்பாய் நடந்தேறியது.

இத்திருமணம் தனவணிக நாட்டு வாலிபர்களிடையே அதிக உற்சாகத்தையும் பேருணர்ச்சியையும் அளித்தது. தம்பதிகள் சுகமாய் வாழ்ந்து வருகின்றனர்.



## ரயில் அட்டவணை.

1—4—1933 முதல்
திருச்சியிலிருந்து காரைக்குடி வரும் வண்டிகள் விபரம்.

| வண்டியின் நெ. | வரும் சமயம் | மானாமதுரைக்குப் புறப்படும் சமயம் |
|---|---|---|
| நெ. 25 பாசஞ்சர் | காலை 6-24 | காலை 6-30 |
| சிலோன் எக்ஸ்பிரஸ் | 10-10 | 10-20 |
| நெ. 27 பாசஞ்சர் | மாலை 1-37 | மாலை ... |
| நெ. 29 பாசஞ்சர் | 4-13 | 4-35 |
| நெ. 33 பாசஞ்சர் | .... | 5-35 |
| நெ. 31 பாசஞ்சர் | இரவு 8-5 | இரவு ... |
| தனுஷ்கோ பாஸ்ட் பாசஞ்சர் | 12-25 | 12-33 |

குறிப்பு:-நெ. 25 சென்னையிலிருந்து வரும் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் தொடர்ச்சி. இதில் சென்னையிலிருந்து நேராக வரும் 1, 2, 3 வகுப்புகள் அடங்கிய ஓர் வண்டி இணைக்கப்பட்டுளது. இந்த வண்டி தனுஷ்கோடிக்கு நேராகப் போவது.

நெ. 29 காரைக்குடியிலிருந்து மானாமதுரை வழியாக மதுரைக்கு நேராகச் செல்லும்.

நெ. 31 லால்குடியிலிருந்து காரைக்குடிக்கு நேராக வருவது.

மானாமதுரையிலிருந்து காரைக்குடிக்கு வரும் வண்டிகள்

| வண்டியின் நெ. | வரும் சமயம் | திருச்சிக்குப் புறப்படும் நேரம் |
|---|---|---|
| நெ. 32 பாசஞ்சர் | காலை ... | காலை 6-45 |
| நெ. 30 மிக்சட் | 8-39 | 8-53 |
| நெ. 34 பாசஞ்சர் | 11-31 | 11-40 |
| சிலோன் எக்ஸ்பிரஸ் | மாலை 4-28 | மாலை 4-34 |
| நெ 26 பாசஞ்சர் | இரவு 7-54 | இரவு 8-7 |
| தனுஷ்கோ பாஸ்ட் பாசஞ்சர் | 12-27 | 12-36 |

குறிப்பு:-நெ. 32 வண்டி நேராக லால்குடி செல்லும்.

நெ. 34 மதுரையிலிருந்து நேராக காரைக்குடி வந்து லால்குடி வரை செல்லும்.

நெ. 26 தனுஷ்கோடியிலிருந்து நேராக வரும் வண்டி. இதில் சென்னை வரை நேராகப் போகும் 1, 2, 3 வகுப்புகள் அடங்கப் பெற்ற ஓர் வண்டி இணைக்கப்பட்டுளது. இது திருச்சியில் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் வண்டியோடு சேர்க்கப்படும்.

### நாய்களைக் கண்டு பிடிக்க.

கைதிகளைக் கண்டு பிடிக்க கைரேகையை போலீஸ் துப்பறியும் உத்தியோகஸ்தர்கள் கையாண்டு வருகிறார்கள். இப்பொழுது தவறிப்போன நாய்களைக் கண்டுபிடிக்க ஓர் புதுமுறை கண்டு பிடிக்கப் பட்டிருக்கிறது. நாய்களின் மூக்குகள் ஒன்றுபோல் இருப்பதில்லையாம். ஆதலால் நாய் மூக்கின் அடையாளத்தை எடுத்து வைத்திருப்பதாயின் அதிலிருந்து தவறிப் போன அல்லது திருடுபோன நாய்களைக் கண்டு பிடிக்க முடியுமாம்.

Reg. No. M. 1509. (12 Pages.) PRICE 0—1—0. Tel: "Oolian"

SUBSCRIPTIONS.
Annual Subscription Rs. 5
Half yearly " Rs. 3
Foreign Annual " Rs. 7

# ஊழியன்



## The "Oolian" a Nationalist Weekly.

Editor: Raya. Chockalingan.

Truth Persists. Service Shines.

Vol XIII. Karaikudi—Wednesday 19th April 1933. No 16

**முதல் மனிதன் எங்கே பிறந்தான்?**

கிருஸ்துவ வேதத்தில் ஆதாமும் ஏவாளும் தான் முதலாவதாக உலகிலிருந்த ஆடவனும் பெண்ணும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவர்கள் வசித்துவந்த இடம் எது என்பதுபற்றி இப்பொழுது பெரும் ஆராய்ச்சி நடைபெற்றுவருகிறது. சிலர் இந்தியாவிலுள்ள தக்காண் பகுதியில் வசித்ததாகச் சொல்லுகிறார்கள். சிலர் இந்தியாவிற்கு தெற்கே இப்பொழுது இந்திய மகாசமுத்திர மிருக்குமிடத்திலிருந்த குமரிக் கண்டமே மனிதர்கள் முதலாவது இருந்த இடம் என்கிறார்கள். இப்பொழுது துர்க்கியிலுள்ள ஆராய்ச்சியாளர்கள் மத்திய ஆசியாவிலேயே முதலாவதாக ஜனங்கள் இருந்து வந்தார்கள்! அவர்கள் துர்க்கியர்கள் என்று சொல்லுகிறார்கள். இது உண்மையாயின் எல்லோரும் துர்க்கியர்களையே தங்கள் மூதாதையர்களாகக் கொண்டிருத்தல் வேண்டும்.

ஃ ஃ ஃ

**நீண்ட மயிருள்ள மனிதன்.**

பின்லண்டு என்ற தேசத்தில் வசியும் ஒரு மனிதனின் குடுமி கஉ அடி நீளமிருக்கிறதாம். இந்த மனிதனுக்கு தற்பொழுது கஅ வயதாகியும் நாற்பது வயது மனிதனுக்குள்ள தேகபலமிருக்கிறதாம். ஆர்டிக் பகுதியிலேயே இவனுக்கு இணையான வேட்டைக்காரர் வேறெவருமில்லையாம். தனது மயிரை ஓர் பையினுள்ளிட்டு அடைத்துக் கழுத்தின் பக்கத்தில் தொங்கப் போட்டிருக்கின்றானாம்.

ஃ ஃ ஃ

**பிறப்புகள் நடைபெறுவது இரவிலேயே.**

குழந்தைகள் மிகுதியாக பகலில் பிறக்கின்றனவா இரவில் பிறக்கின்றனவா என்று ஆராய்ந்ததில் பாரன் வான் வெர்ஸ்சூர் என்ற பெரிய ஆராய்ச்சியாளர் நீண்ட காலத்திற்குப் பின்னர் இரவிலேயே மிகுதியாக பிறப்பதாகக் கூறுகின்றார். இரட்டைக் குழந்தைகள் பெருமபாலும் நண்பகலிலேயே பிறக்கின்றனவாம்.

ஃ ஃ ஃ

**அபூர்வ ஆகாய விமானம்.**

இங்கிலாந்தில் ஒரு புதுமுறையான ஆகாயவிமானம் தயார் செய்யப்பட்டிருக்கிறதாம். இந்த விமானம் கடலில் விழுந்தால் தண்ணீரினுள் ஆழ்ந்து விடாதபடி அது செய்யப்பட்டிருக்

## உருசிகரத் துணுக்குகள்.

மனிதர் மூதாதையர் துர்க்கியரா?—தூங்காதிருப்பின் உயரம் குறையும்—மிகுதியான குழந்தைகள் பிறப்பது எப்பொழுது?—சமையல் செய்யும் மின்சார எந்திரம்!—கரியிலிருந்து பெட்ரோல் கிடைக்குமா?

கிறது. விமான ஓட்டி இருக்கும் சீட்டிற்கு அடியில் காற்றுப்பைகள் வைக்கப் பட்டிருக்கின்றனவாம். இதன் உதவியால் பல மணிநேரம் தண்ணீரில் மிதந்துகொண்டே இருக்கமுடியுமாம்.

ஃ ஃ ஃ

**யாவும் மின்சார சக்தி!**

அமெரிக்காவில் மின்சார சக்தியின் உதவியால் ஓர் வீட்டிலுள்ள எல்லா வேலைகளும் செய்யப்படுகின்றனவாம். இந்த வீடு கனக்டிகட்டிலுள்ள கால்ட்வெல் என்பவருக்குச் சொந்தமானது. வீடும் தோட்டமும் சேர்ந்து சுமார் ரு௦ எக்கர் விஸ்தீரணம் இருக்கிறதாம். காலையில் கதிரவன் கிரணம் பட்டதும் விளக்குகள் யாவும் தானாக நின்று விடுகின்றனவாம். ஓர் எலக்ரிக் கடிகாரத்தின் உதவியால் குறிப்பிட்ட காலங்களில் கோழிக்கூடுகள் திறக்கவும் மூடவும் படுகின்றன. கால்ட்வெல், ஓர் பொத்தானை அமுக்குவாராம். உடனே உணவு மின்சார சக்தியால் தயார் செய்யப்படுமாம்; வெளியே இரவு புறப்படுவதாயின் கார் ஓடும்பொழுது அது ஓர் கம்பியில் தட்டுமாம். அது பாதையில் முந்நூறு அடிகளுக்கு முன்னருள்ள சிவப்பு விளக்கைத் தட்டிவிடுமாம். கால்டுவெல் தனது பண்ணையை விட்டுச் சென்றதும் விளக்குகள் தாமாகவே நின்றுவிடுமாம். திரும்பவும் கால்டுவெல் என்பார் வீட்டிற்குத் வந்ததும் விளக்குகள் தாமாகவே எரியுமாம். யாராவது அவரை பார்க்க வந்தால், வெளியே வைத்திருக்கும் 'மின்சாரக்கண்' உள்ளே தகவல் சொல்லுமாம். குழந்தைகளுக்கு விளையாடவும் பொம்மைகள் மின்சார சக்தியால் செய்யப்பட்டிருக்கின்றனவாம். குழந்தைகளை மின்சார சக்தியே உறங்கவும் வைக்கின்றனவாம்.

ஃ ஃ ஃ

**செலவு ரூபாய் இரண்டே.**

இவ்வளவு பிரமாதமான வேலைகள் செய்யும் மின்சார சக்திக்காக மிஸ்டர் கால்ட்வெல் நாளொன்றுக்கு இரண்டு ரூபாய்தான் செலவு செய்கிறாராம்.

ஃ ஃ ஃ

**ருடு-வருடம் சகோதரனாக நடித்தவன்**

டில்லியின் அருகாமையிலுள்ள ஓர் கிராமவாசியின் சகோதரன் துறவியாகச் சென்றுவிட்டானாம். சில காலங்களுக்குப் பின்னால், அக்கிராம வாசிகள் சாமியாராகச் சென்ற சகோதரனைக் கண்டதாகவும் அவன் இருக்குமிடம் தங்களுக்குத் தெரியுமென்றும் கூறினார்களாம். எனவே, அந்த சாதுவை அழைத்துவந்து அந்த கிராமத்தான் தனது ஆஸ்திகள் யாவற்றையும் இரண்டு பாகமாகப் பிரித்து, ஒரு பகுதியைத் தனது சகோதரனாக நினைத்த சாதுவுக்குக் கொடுத்தானாம். இவ்வாறு இருவரும் சகோதரர்களாக சுமார் ருடு வருடங்கள் வாழ்ந்து வந்த பின்னர், சகோதரன் என்று தாம் நினைத்துவந்த மனிதன் அயலான் என்றும், தனது வகுப்பையே சார்ந்தவனல்லவென்பதும் தெரியவந்ததாம். எனவே, இது விஷயம் தெரியவந்ததும் அவன்மீது வழக்குத் தொடர்ந்து அந்தக் கிராமத்தான் தீர்ப்பும் வாங்கினானாம். ஆனால் சாது வீட்டைவிட்டுச் செல்ல மறுத்துவிட்டான். ஊரில் இருகட்சி ஏற்பட்டு இரண்டு பேருக்கும் போர் செய்ய வேண்டும் நிலை ஏற்பட்டுவிட்டதாம். ஆகலால் மஜிஸ்திரேட் சாதுவைப் பிடித்து நன்னடக்கை ஜாமீன் பேரில் விடுதலை செய்துள்ளாராம்.

ஃ ஃ ஃ

**பிரிட்டிஷ் சாம்பிராஜ்யத்தின் ஜனத்தொகை.**

பிரிட்டிஷ் சாம்பிராஜ்யத்தின் மொத்த விஸ்தீரணம் க,ஙச,கூக,கூஎஎ சதுரமைல் என்று சொல்லப்படுகிறது. இது உலகின் மொத்த விஸ்தீரணத்தில் நான்கில் ஒரு பகுதியாகிறது. இந்த எல்லைக்குள் வசியும் ஜனங்களின் மொத்தத் தொகை சரு கோடி. இவருள் சுமார் ருகூ கோடி மக்கள் இந்தியாவிலும் இலங்கையிலுமாக விருக்கின்றார்கள்.

ஃ ஃ ஃ

**கற்கரியில் எண்ணெய்!**

கல்கரியிலிருந்து பலவிதமான எண்ணெய்கள் தயார் செய்யலாம் என்று சயன்ஸ் நிபுணர்கள் தற்பொழுது கண்டுபிடித்துள்ளார்கள். இது எப்படித் தெரியுமா? ரசாயன சாஸ்திரப்படி ஆராய்ச்சி செய்து பார்த்ததில், எண்ணெயில் கார்பன், ஹைட்ராஜன் என்ற இரண்டு தனிப் பொருள்கள் இருப்பதாகக் கண்டுபிடித்துள்ளார். எனவே, கற்கரியிலிருந்து எண்ணெய் எடுக்க அதனை முதலாவது பொடியாக்குவார்களாம். பின்னர் சிறிது எண்ணெயோடு கலந்து ஹைட்ராஜன் என்னும் நீர்வாயு மிகுதியாகவிருக்கும் பாத்திரத்தில் காய்ச்ச வேண்டும். அப்பொழுது கிடைக்கும் எண்ணெயைப் பின்னர் சுத்தஞ் செய்யவேண்டும். இதிலிருந்து லூஸ் ஆயில்முதல் எல்லா விதமான பெட்ரோல் எண்ணெயும் தயார் செய்யலாமாம்.

ஃ ஃ ஃ

**தூக்கமின்மையால் உயரம் குறையும்.**

தூக்கமில்லா திருப்பதாயின் சிலர் உடலின் கனம் குறையும் என்று கூறுகிறார்கள். இப்பொழுது அமெரிக்கர் ஒருவர் தூக்கமின்மையால் உடம்பின் உயரமும் குறைந்துவிடும் என்கிறார். ஜியார்ஜியா என்ற நகரில் மாணவர்கள் பரீட்சைக்காக படித்துக்கொண்டிருக்கையில் நான்கு நாட்கள் தொடர்ந்தாற்போல் தூங்காமல் இருந்தார்களாம். இதனால் அவர்கள் ஒவ்வொருவர் உயரத்திலும் அரை இஞ்சு குறைந்து விட்டதாம். பின்னர் இரண்டு வாரங்கள் ஓய்வு எடுத்துக்கொண்டதும் திரும்பவும் தங்கள் உயரத்தைப் பெற்றார்களாம்.

ஃ ஃ ஃ

**நன்றாகத் தூங்குமிடம்.**

ஒரு மனிதன் நன்றாகத் தூங்க வேண்டுமானால் முதலாவது அந்த இடம் சத்தடியற்றதாக விருக்க வேண்டும். ஏனெனில், இரைச்சலால் தூக்கம் கெடும். தூங்குபவர் விழித்துக் கொள்ளாவிடினும் அவர் இரத்தம் கொதிக்கத் தொடங்கிவிடுமாம். நன்றாகத் தூங்க வேண்டுமாயின் தூங்கும் அறை நீலம் அல்லது பச்சைக்கலருடையதாக விருக்கவேண்டுமாம்.

ராய. சொக்கலிங்கனால் காரைக்குடி "ஊழியன்" பவர் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

